

Team Health Shoppe For Wellness

# புரசையில் ஒரு புதிய உதயம்

## சென்னையில், டீம் ஹெல்த் ஷாப்பின் 4வது கிளை திறப்பு புரசைவாக்கத்தில்

23B, கீழ்தளம், பிரின்ஸ் டவர், (அபிராமி மால் எதிரில்),
புரசைவாக்கம் நெடுஞ்சாலை, போன்: 4542 8898





பாரம்பரியமான அழகு சாதன மற்றும் உணவு பொருட்களை இயற்கையான முறையில் வழங்குகிறோம். வாருங்கள், வாழ்க்கைக்கு மேலும் மெருகேற்றுங்கள்.

### டீம் ஹெல்த் ஷாப்பின் இதர பொருட்கள்

• டீம் சோடியம் அல்லாத உப்பு • டீம் அரை உப்பு • டீம் நல்லெண்ணெய் (ரசாயனமற்ற குளிர்முறை தொழில்நுட்பம்) • டீம் தேங்காய் எண்ணெய் (ரசாயனமற்ற குளிர்முறை தொழில்நுட்பம்) • கற்றாழை - சருமம் மற்றும் மேனிப் பராமரிப்பு பொருட்கள் • தேன் பொருட்கள் • டீம் எனர்ஜி வாட்டர் • மரபு முறை, கைகுத்தல் உணவுப் பொருட்கள் • கொடைக்கானல் மலை தைலம் • பனைப்பொருட்கள்

• ஆலோவீராவில் ஆன அழகு சாதன பொருட்கள் • இயற்கை முறையில் தயாரிக்கப்பட்ட உணவுப் பொருட்கள்.

உங்களை அன்புடன் வரவேற்கிறோம்

ஸ்பெஷல் ஆஃபர்*

அனைத்து ஆலோவீரா தயாரிப்புகளுக்கும் 5-10% தள்ளுபடி.
இச்சலுகை குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமே





**TEAM EUBIO CARE** (Division of CAL)

வண்டலூர்: டீம் ஹவுஸ், ஜி.எஸ்.டி. ரோடு, சென்னை - 48. போன் : 2275 0502

அண்ணாநகர்: பிளாட் 1200, Z பிளாக், 6வது அவென்யு, (லேபர் ஆபிஸர்ஸ் குவார்ட்டர்ஸ் அருகில்) போன் : 4269 3332

இந்திரா நகர்: 3வது அவென்யு, எண்.26, தரைதளம், கார்பரேஷன் ஷாப்பிங் காம்ப்ளக்ஸ், போன் : 4269 5115




For bulk requirements, Please Contact : வண்டலூர்: டீம் ஹவுஸ், ஜி.எஸ்.டி. ரோடு, சென்னை - 48. Fax : 2275 0502
E-mail: teamhealthshoppe@drraoholdings.com

Web : www.teamhealthshoppe.com

Sunday Open

# கல்கி




குடும்பத்துடன் படிக்க...

8.7.2007


ஆகஸ்ட் 5 முதல் உலகெங்கும்...

- சோழ நாட்டின் சுதந்திர முழக்கம்!
- ஒரு வீரத் திருமகனின் இலட்சியக் கனவு!
- ஒரு காவிய நாயகனின் கனிந்த ராஜ தந்திரம்!

- இவற்றினிடையே காதல் விழிகளின் ரகசிய சங்கமம்!
புரவிகளின் குளம்பொலி!
போர்க்காலத்து முரசொலி!

அத்தனையும் கலந்த
அமரர் கல்கியின் தமிழொலி...



பழைமையும்
நவீனமும் கைகோக்கும்
காட்சியமைப்புடன்...

# இந்தியர்களின் ஒருமித்த கருத்து!



வட்டமேஜை

டோனி பிளேர் பற்றி நீங்கள் தெரிவித்திருந்த தகவல்களைப் பார்க்கும்பொழுது, அவர் இன்னும் கொஞ்சம் வருடங்கள் பதவியில் இருந்திருக்கக் கூடாதா? என்ற ஆதங்கம் ஏற்படுகிறது.

- ரொசாரியோ ரவிச்சந்திரன், சென்னை

தனியார் தொழில் கல்லூரிகள் - பொறியியல் கல்லூரிகள் - இன்று லட்சங்களைக் குறிவைத்துச் செயல்படுவதை, அட்மிஷன் பிரச்னை கட்டுரை அப்பட்டமாகப் படம் பிடித்துக் காட்டியது.

- உ.மகாதேவிபலராமன், திருவண்ணாமலை

அரசியல் தலைவர்கள் அவரவர் விருப்பத்துக்கு இணங்க, ஒருவரை, குடியரசுத் தலைவர் பதவிக்குச் சிபாரிசு செய்து அந்தப் பதவியை 'இசை நாற்காலியாக' ஆக்கியுள்ளதைக் காட்டிய 'பிள்ளையின்' கார்ட்டூன் மிக அருமை!

- இரா.சக்கரபாணி, மதுரை

'தித்திக்கும் திங்கள்' பகுதியை ஆவலுடன் வரவேற்கிறோம். கல்கி வாசகர்களின் கருத்துகளை அறிய இது ஒரு சரியான வழி.

- தர்மன் பெரியசாமி, சென்னை

கிரேஸியின் பதில்களை, தொடர்ந்து படித்து வருகிறேன். 'கலக்குற கிரேஸி' என்று கத்திப் பாராட்டத் தோன்றுகிறது.

- என்.பாலகிருஷ்ணன், மதுரை

'சிகரத்தில் சிவாஜி' சிறுகதையில் சிவாஜியின் உயிரைக் காப்பாற்றிய மதாரி பாத்திரம் மெய்சிலிர்க்க வைத்தது.

- பி.சிவா, பாளையங்கோட்டை

ஜனநாயகத்தின் மீது அசைக்க முடியாத நம்பிக்கை வைத்திருக்கும், பல கோடி இந்தியர்களின் ஒருமித்த குரல் கல்கியின் தலையங்கம்.

- ஜே.துரைராஜ், சென்னை

எந்த முன்னறிவிப்பும் இன்றி அசத்தி

## ஸ்பீடு போஸ்ட்

கல்கியில் ஏற்படப்போகும் மாற்றம் இந்த இதழின் (1.7.2007) முன் அட்டையிலேயே தெரிகிறது!

சமூகப் பிரச்னையை போக்கஸ் செய்து, சினிமாவைச் சிறியதாக்கி பேசப் செய்துள்ளீர்கள். நன்று.

இளந்தளிர்களின் பாலியல் பிரச்னைகளால் மாமல்லபுரம் பல வீனம் அடைந்து, மகா'பாவ'புரமாக மாறிக் கொண்டிருப்பதை அரசு

விட்டார்களே, அசத்தி! தித்திக்கும் திங்கள் பகுதி, நாங்கள் எதிர்பாராத, ஒரு ஜாக்பாட் பகுதி!

**- அ.அனீஸ், திருச்சி**

ஐம்பத்தெட்டு ஆண்டுகளுக்கு முன் 'என்ன கேடு நேரப் போகிறதோ?' என்று அமரர் கல்கி அவர்கள் அஞ்சிய நிலை இன்றும் நமது கல்விச் சூழலில் காணப்படுகிறது!

**- நா.பாலசுப்பிரமணியன், சென்னை**

எந்தத் தேடலுக்கும் ஏற்ற வயசு பதினாறு தான்! கிரேஸியின் பதில் யதார்த்தம். வாழ்க்கையைத் தொலைத்துவிட்டு துன்பப்படும் அனுபவசாலிகளின் ஒப்புதல் வாக்கு மூலம் அது!

**- மு.செந்தில்குமார், திருச்சி**

மதுரை மேற்குத் தொகுதி தேர்தல் முடிவை கல்கி முன்கூட்டியே சரியாக வெளியிட்டமைக்கு சபாஷ். தேர்தல் முடிவு என்பது கட்சி வெற்றி மட்டுமல்ல. மக்கள் உணர்வையும் பொருத்தது.

**- அ.யாழினிபார்வதம், சென்னை**

அமரர் கல்கி நினைவு அறக்கட்டளை மூலம் ஆண்டுதோறும் ஏழை மாணவ மணிகளுக்கு வழங்கி வரும் உதவித் தொகையில் ஆண்டு தோறும் அதிகரித்து வருவது மகிழ்ச்சி தருகிறது.

**- மு.செந்தில்குமார், கொடாப்பு**

விறுவிறுப்புடன் பயணம் செய்யும் கொசுவை அரசியல் காரணமாக வாசகர்கள் ரசிக்கவில்லையோ? அப்புறமென்ன... தொடர் ஆரம்பித்தது முதல் இதைப் பற்றிய விமர்சனத்தை வட்ட மேஜையில் காணவில்லையே!

**- மு.செந்தில்குமார், திருச்சி**

உணர்ந்து அதிரடி நடவடிக்கை எடுக்காவிட்டால் நமது பண்பாடும், மேன்மையும் படுகுழியில் தள்ளப்படுவது நிச்சயம்.

அப்புறம் சிரி, சிந்தி, செயல்படு கடைசிப் பக்கம் தமிழ் நாட்டின் தற்போதைய சரியா(வா)ன முகவரியைச் சுட்டிக்காட்டியிருக்கிறது என்பதை, சூடம் ஏற்றிச் சத்தியம் செய்யலாம்!

**- எஸ்.கே.மூர்த்தி, கும்பகோணம்**




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

தலைமை உதவி ஆசிரியர் :
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ.440/-**
**ஆறு மாதம் : ரூ.220/-**
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 **யு.எஸ். டாலர்**

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# 'சிவாஜி' எழுப்பும் சிந்தனைகள்!



ரஜினி ஸ்டைலில் எதுவும் சாத்தியம்! கறுப்புப் பணத்தை வெள்ளையாக்கலாம் - பெயின்ட் அடித்துக்கூட புழக்கத்தில் விடலாம்! ரசிகர்கள் ஏற்பார்கள். கற்பனையில் சுகம் காணலாம்; யதார்த்தம் என்பது வேறு.

நம் நாட்டில் புழங்கும் கறுப்புப் பணத்தைக் கணக்கிட்டுச் சொல்வது காற்றுக்கு வேலி போடுகிற முயற்சிதான்! இருந்தாலும், கணக்குப் போட்டிருக்கிறார்கள் - 1983ல் வெளியிடப்பட்ட சங்கர் - ஆச்சார்யர் கமிட்டி அறிக்கை முப்பத்தேழாயிரம் கோடி என்றது. 2005ல் அரவிந்த் விர்மானி அறிக்கை ஒன்பது லட்சம் கோடி என்றது. அதே விகிதாச்சாரத்தில் 'வளர்ந்து செழித்தது' என்று அனுமானித்தால், சிவாஜி படத்தில் சொல்லப்படும் இருபது லட்சம் கோடி ரூபாய் கறுப்புப் பணம் என்கிற கணக்கு ஓ.கே.

ஆனால், வேடிக்கையும் வேதனையும் கலந்த முரண்பாடு ஒன்றை சினிமா ரசிகர்களான நாம் மறந்துபோகிறோம்.

இந்தியாவின் கறுப்புப் பணச் சந்தையில் ரியல் எஸ்டேட், நகைத் தொழிலுக்கு அடுத்து திரையுலகத்தின் பங்கு கணிசமானது. இந்த உண்மையை எந்த சினிமாவும் எடுத்துச் சொல்லாது. நாம்தான் சிந்தித்துத் தெரிந்துகொள்ள வேண்டும்.

திரையுலகத்தினர் வரி பாக்கி வைத்துள்ள செய்தி, அவர்களது பங்களாக்களில் நடத்தப்படும் 'ரெய்டுகள்' போன்ற செய்திகள் அவ்வப்போது இந்த உண்மையை நமக்கு நினைவூட்டிக் கொண்டிருக்கும். ஆனால், வெள்ளித் திரையின் வசீகரிப்பில் மயங்கி, நாம் இதை ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்வதில்லை.

மாதச் சம்பளக்காரர்களுக்கு, வருமான வரி பிடித்தம் செய்தது போக எஞ்சும் தொகையே கைக்கு வரும். பிசினஸ் வருமானம் உள்ளவர்களுக்கு அப்படி அல்ல. அவர்கள் எந்தத் தொகைக்கு எப்படிக் கணக்கு எழுதுகிறார்கள் என்பதை ஓரளவுக்குத்தான் கண்காணிக்க முடியும். கணக்கியல் நிபுணர்கள் துணையோடும் ஆசியோடும் ஜாம் ஜாமென்று இரண்டு கணக்குகள் - ஒன்று வருமான வரிக்கு; மற்றொன்று கறுப்புப் பணத்துக்கு வைத்துக் கொண்டு எந்தக் கவலையும் இல்லாமல் வலம் வருவோர் ஏராளமாக இருக்கிறார்கள். எல்லாத் துறைகளிலுமே இத்தகைய





வரி ஏய்ப்பு மன்னர்கள் உண்டுதான். அரசியலில் இலஞ்சப் பணம் முழுவதுமே கணக்கில் காட்டப்படாத கறுப்புப் பணம் என்பதால், அரசியல்வாதிகளின் பங் களிப்பும் அமோகம். எனினும், கறுப்பை வெள்ளை யாக்கும் சினிமா கதை வெளியாகியிருப் பதையொட்டி, அத்துறையினர் உருவாக்கும் கறுப்புப் பணம் குறித்துப் பார்ப்போம்.

விலைவாசி உயர்வுக்கு இந்தக் கறுப்புப் பணப் புழக்கமும் ஒரு முக்கிய காரணம். பணப் புழக்கம் (inflation) அதிகமாக அதிகமாக பொருட்களின் விலையும் உயரும் என்பது பொருளாதார அடிப்படை விதி. உற்பத்தியாகும் பொருட் களின் அளவு குறைவாகவும், அவற்றை வாங்க விரும்பி துரத்திக் கொண்டு வரும் பணப் புழக்கத்தின் அளவு அதிகமாகவும் இருக்கிற போது (Too much money chasing too few goods.) விலைவாசி மளமள வென்று உச்சாணிக் கொம்புக்கு ஏறும். கறுப்புப் பணம் படைத்தவர்கள் எந்த விலை கொடுத்தும் அவற்றை வாங்கி விடுவார்கள்; சமர்த் தாக வரி செலுத்தும் மாதச் சம் பளக்காரர்கள் வாயைக் கட் டவா வயிற்றைக் கட்டவா என்று திண்டாடுவார்கள்.

பிற தொழில்களில், கோடானகோடி ரூபாய் முதலீடாகிறபோது, பெரும்



பாலும் தொழில் நிர்மாணம் என்பது நிகழ்கிறது. ஒரு பெரிய தொழிற்சாலையோ அலுவலகமோ நிறுவப்பட்டு, அதன் மூலம் சில நூறு பேருக்கேனும் நிரந்தர வருமானம் கிடைக்க வழி பிறக்கிறது. அந்த தொழிலகம் சிறப்பாக இயங்குகிறபோது பொருட்களின் உற்பத்தியானது தேசிய மொத்த உற்பத்தி (Gross domestic produce) மேம்படுவதற்கு உதவுகிறது. இதன் மூலம் பணப் புழக்கத்துக்கும் உற்பத்திப் பொருட்களின் மதிப்புக்கும் இடையேயான இடைவெளி குறைய உதவுகிறது.

ஆனால், சினிமா தொழிலில் அப்படிப்பட்ட பொருள் உற்பத்தி என்பது நிகழ்வதில்லை. ஒற்றை மனிதரை நம்பி, அல்லது வெறும் காட்சி பிரம்மாண்டத்தையும் கேளிக்கை அம்சங்களையும் நம்பி, மிகப் பெரிய முதலீடு நிகழ்கிறது. சினிமா இண்டஸ்ட்ரியில் பணியாற்றும் பலநூறு பேருக்கு இதனால் ஒரு குறிப்பிட்ட கால கட்டத்துக்கு மட்டுமே வேலை வாய்ப்பு கிடைக்கிறது. முதலீடாகும் கற்பனைக்கெட்டாத பணம் பல மடங்காகத் திரும்பி வரும்போது, அதனைப் பகிர்ந்து கொள்வோர் ஒரு சிலரே. மிக அதிகமான முதலீடு, கொள்ளை கொள்ளையாக இலாபம் அல்லது மூழ்கிப் போகும் அளவுக்கு நஷ்டம்! - இது தான் பொதுவாக சினிமா பொருளாதார ஃபார்முலாவாக இருந்து வருகிறது.


★ எம்.ஆர்.வெங்கடேஷ்

★ இதனால் சினிமா உலகில் கீழ் நிலையில் பணியாற்றும் ஊழியர்களின் வாழ்க்கைத் தரம் உயர்கிறதா?

★ நூற்றுக்கணக்கான கோடிகள் முதலீடாகி, அதற்கு ஈடான பொருட்கள் உற்பத்தி ஆவதற்குப் பதிலாக, சில நாட்கள் அல்லது வாரங்களுக்கு ஒரு சினிமா ஓடி மறைந்து போவதென்பது ஆரோக்கியமான பொருளாதாரமா? அதனால் நாட்டு வளம் பெருகுமா?

★ இன்றைய காலகட்டத்தில் சினிமாவை ஒரு தொழிலாக அங்கீகரித்து வங்கிக் கடன்கூட கொடுக்க ஆரம்பித்திருக்கிறார்களே; அந்த அளவுக்குத் தொழில் ரீதியான அணுகுமுறையுடன் சினிமா இண்டஸ்ட்ரி நடந்து கொள்கிறதா?

★ வங்கிப் பணம் என்பது பொது மக்களின் சேமிப்பு. அதைக் கடனாகப் பெற்று சினிமா எடுப்பது பொதுப் பணத்தை முதலீடு செய்வதுபோல்தான். அவ்வாறு முதலீடாகும் பொதுப்பணம் உயர்ந்த, காலத்தை வென்று நிற்கக் கூடிய சினிமா படைப்புகள் உருவாக உதவுகிறதா?

மேற்கண்ட கேள்விகளை சினிமா உலகமும் சரி, ரசிகர்கள் உலகமும் சரி - எழுப்புவதுமில்லை; விடை தேடுவதுமில்லை.

மாறாக, இத்தகைய கேள்விகள் எழுப்புவோரை வினோதமாகப் பார்க்கும் அளவுக்கு இன்றைக்கு சினிமா பொருளாதாரத்தின் பிரம்மாண்டம் ஒரு சிறு வட்டத்துக்கு மட்டுமே பயன்படுகிற அளவுக்கு 'செட்' ஆகிவிட்டது.

இந்தப் போக்கு குறித்து ஆடிட்டர் எம்.ஆர்.வெங்கடேஷிடம் கேட்டபோது,

"சிவாஜி திரைப்படத்தில் காட்டப்படுவது போல் கறுப்புப் பணத்தை ஒழிப்பது என்பது சாத்தியமல்ல. வளரும் நாடுகள் பலவற்றில் இன்று கறுப்புப் பணம் மிகப் பெரிய பிரச்னையாக இருக்கிறது; ஆனால், இந்தியா போல் ஏழை

களும் எளிய மக்களும் மிக அதிகமாக உள்ள நாடுகளில் இதனால் விளையும் பொருளாதார சேதம் மிக அதிகம். எனினும் திரையுலகம் மட்டுமே கறுப்புப் பணத்துக்குப் பொறுப்பு என்று சொல்வது தவறாகிவிடும். ஒரு நாட்டின் அரசாங்கம் எவ்வளவுக்கெவ்வளவு பலவீனமாக இருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு கறுப்புப் பணம் புழங்கும். மேலும், சாதாரண எளிய குடிமக்கள்கூட பில் போடாமல் பொருட்கள் வாங்குகிறபோதெல்லாம் கறுப்புப் பண உற்பத்திக்கு உதவுகிறார்கள். வரி ஏய்ப்புக்குத் துணை செய்கிறார்கள். எத்தனையோ வியாபாரிகள் கணக்குப் புத்தகங்களே வைத்துக் கொள்ளாமல் மனக் கணக்கும் கைக்காகமாக வாழ்க்கை நடத்துகிறார்கள். வரி விதிப்பு முறையையும் தண்டனைச் சட்டங்களையும் எவ்வளவு திருத்தினாலும் மாற்றினாலும் ஏய்ப்பதற்குப் புதுப்புது வழிகள் கண்டுபிடிக்கப் படுகின்றன...'' என்றார்.

பிறர் செய்யும் தவறுகளால் சினிமா உலகின் கறுப்புப் பணக் கலாசாரம் நியாயப்பட்டுப் போக முடியாது. இன்னும் சொல்லப் போனால், சினிமா போன்ற வலுவான, மக்களின் மீது செல்வாக்கைச் செலுத்தி அவர்களை மாற்ற வல்ல ஊடகங்களும், அவற்றின் அதிபதிகளும் தான் கூடுதல் பொறுப்போடு நடந்து கொள்ள வேண்டும். நமது நாட்டில் திரை நட்சத்திரங்களை, அவர்களது வாழ்க்கை முறையை, திரையுலகை மக்கள் ஆதர்ச மாகவே கொள்கிறார்கள் என்பதை மறந்துவிட முடியாது.

**ச**மூகப் பொறுப்புடன் சினிமா தயாரிப்பாளர்கள் நடந்து கொள்ளாத வரையில் அவர்களுக்கு வங்கிக் கடன் அளிப்பதுகூட சரியல்ல என்கிறார் இந்தியன் வங்கி தலைவராகவும் அதற்கு முன் பேங்க் ஆஃப் மஹாராஷ்டிரா தலைவராகவும் விளங்கிய டி.எஸ்.ராகவன்.

''நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு உதவும் வகையில் அல்லாமல் கறுப்புப் பணப் புழக்கத்துக்கு ஊக்கமளிக்கும் சினிமாக்களை எடுக்க வங்கிகள் நிதி உதவி செய்வது தவறு'' என்கிறார் இவர்!

''பொருட்களை உற்பத்தி செய்வதற்கும், சேவைகளை அளிப்பதற்கும் அதன் மூலமாக பொருளாதாரம் வளர்ச்சி அடையவும் வழி செய்வதுதான் வங்கிகளின் தலையாய நோக்கம். அதன் மூலமாக நாட்டில் உற்பத்தி பெருகும்; தொழில் வளர்ச்சி அடையும்; நிரந்தரமான வேலை வாய்ப்புகள் அதிகரிக்கும்; அதனை விட்டு விட்டு, சினிமா போன்ற ரிஸ்க் அதிகமான துறைகளுக்குக் கடன் கொடுப்பதால், நாட்டில் உற்பத்திக்கு உதவாத பணப் புழக்கம் அதிகமாகும்; அதனால் ஒரு சாராரது வாங்கும் சக்தி மட்டும் அதிகமாகும்; ஆனால், பொருள் உற்பத்தி அதிகரிக்காது; இதனால் விலைவாசி உயரும்; பணவீக்கம் அதிகமாகும். வங்கிகள் நாட்டின் தொழில் மேம்பாட்டுக்கும், பொருளாதார வளர்ச்சிக்கும் கிரியா ஊக்கிகளாகச் செயல்பட வேண்டுமே தவிர இலாபம் சம்பாதிப்பதற்காக எதற்கு வேண்டுமானாலும் கடன் கொடுக்கும் லேவாதேவிக்காரராக இருக்கக் கூடாது'' என்று அழுத்தமாகக் கூறுகிறார் டி.எஸ்.ராகவன்.


டி.எஸ்.ராகவன்

கோடிக்கணக்கில் பணத்தைக் கொட்டி எடுக்கப்படும் படங்கள், பெரும்பாலும் மலிவான ரசனைக்குத் தீனி போடும் ஆரோக்கியமற்ற பொழுதுபோக்குப் படங்களாக இருக்கின்றன என்பது கவலையளிக்கும் நிஜம்.

- அர்ஜுன்

# கிரேஸியைக் கேளுங்கள்!

★ ஏ. ஷண்முகசுந்தரம், பெங்களூர்.

**லாலு பிரசாத்தைச் சந்தித்தால்... இந்தியில் நீங்கள் என்ன கேட்பீர்கள்...? அவர் தமிழில் என்ன பதில் சொல்வார்...?**

''லாலுஜி... 'ராஜீவ்காந்திக்கு' 'இந்திரா காந்தி' என்ன உறவு என்று உங்கள் ஊர் பீஹார் மாட்டிடம் கேட்டால், அதற்கு அந்த மாடு என்ன பதில் சொல்லும்..?'' என்று இந்தியில் நான் கேட்பேன். அதற்கு லாலுஜி, ''....ம்மாாாாா'' என்று பசு(ந்) தமிழில் பதில் பகர்வார்.

★ என்.எஸ். மணிமாறன், திருவண்ணாமலை.

**சரித்திர நாவல் எழுதும் ஆற்றல் தங்களுக்கு உண்டா...?**

சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்பு, ''மோகன், நீங்கள் ஜூனியர் விகடனில் ஒரு சரித்திர நகைச்சுவை நாவல் எழுதுங்களேன்...'' என்று கூறி ஆனந்த விகடன் ஆசிரியர் திரு. பாலசுப்ரமணியன், என்னை ஸ்ரீவத்ஸ கோத்திரத்திலிருந்து சாண்டில்ய கோத்திரத்துக்கு மாற வற்புறுத்தினார். ''சார் இந்த விளையாட்டுக்கு நான் வரலை! சோழ நாட்டை ஆண்டது சோழர்கள், பாண்டிய நாட்டை ஆண்டது பாண்டியர்கள் போன்ற அடிப்படை சரித்திர ஆதாரங்கள் மட்டுமே தெரிந்த அளவுக்குத்தான், எனக்குச் சரித்திர அறிவு...'' என்று பதறியபடி நான் புறமுதுகு காட்டினேன். அருகிலிருந்த இணை ஆசிரியர் 'ஹாய் மதன்' என்னை ''டாய் மோகன்'' என்று சிம்மக்குரலில் கர்ஜித்து மிரட்டி, கனிவாக ஊக்குவித்தார். 'கே.பி.டி. சிரிப்பு ராஜ சோழன்' என்ற சரித்திர நகைச்சுவை நாவலை, இருபத்தைந்து வாரங்களுக்கு வெற்றிகரமாக எழுதினேன். விரல்கள் தினவெடுக்க ''சரித்திர நாவலைத் தொடர்ந்து பூகோள நாவல், கணித நாவல் என்று எழுதட்டுமா...?'' என்று கேட்டதற்கு அவர்கள் ஏனோ பதில் சொல்லவில்லை.

★ கௌரி, சேலம்.

**கோவிலின் தத்துவம் என்ன..?**

"All - I - AM" என்பதை உணர்த்த வந்ததே 'ஆலயம்...'

★ வெங்கட்ராமன், மைலாப்பூர்.

**நீங்கள் மூதறிஞர் ராஜாஜியை ரோல் மாடல் என்று சொல்லியிருக்கிறீர்களே...? சொல்ல வைத்தது எது...?**

அரசியல் பிஸிக்கு நடுவிலும், ஆன்மிகப் பணியாக அவர் எழுதிய 'சக்ரவர்த்தி திருமகன்', 'வியாசர் விருந்து' ஆகிய நூல்கள் இல்லாத வீடு 'டு-லெட்' போட்ட வீடாகத்தான் இருக்கும். எம்.எஸ்ஸில் ஆரம்பித்து சுதா ரகுநாதன் வரையில் பாடிய அவரது ஒரே பாடலான 'குறையொன்றுமில்லை கோவிந்தா'வைப் பாடாதவர்கள், கண்ணை மூடிக் கேட்டு ரசித்துக் கொண்டிருப்பவர்களாக இருப்பார்கள். ராஜாஜிக்கு கூஜாஜி என்று சொல்லிக்கொள்ளும் அளவுக்கு, பரம பக்தரான எனது தாத்தாவோடு பலமுறை




# ஜோஸ்யமா?

அவரைச் சந்தித்து பிரமித்திருக்கிறேன். கொள்கைகளைச் சொக்காய்ப் போல மாற்றிக் கொண்டேயிருக்கும் 'ரோலிங் மாடல்'களுக்கு நடுவே, கடைசி வரையில் தனது கொள்கையில் மாறாது இருந்தவர் எனது 'ரோல் மாடல்.' இவரை ஓவியமாக வரைந்து என் தாத்தா சிபாரிசு மூலமாக ஆட்டோகிராஃப் வாங்க முயன்றேன். என் தலையெழுத்து கையெழுத்து போடாம லேயே, 'கோவிந்தனை'ப் பார்த்து 'குறை யொன்றுமில்லை' சொல்லப் புறப்பட்டுப் போய்விட்டார் மூதறிஞர்.



★ **எஸ். சுவாமிநாதன், மன்னார்குடி.**

***'டென்ஷன்' ஓவராகப் போனால் எப்படிக் குறைத்துக் கொள்வது...?***

'டென்ஷன்' தரும் காரியத்தின்பால் கொண்ட 'அட்டென்ஷனை' குறைத்துக் கொள்ளுங்கள்.

★ **என். ஷண்முகம், திருவண்ணாமலை.**

***கவிஞர் கனிமொழியிடம் உங்களுக்குப் பிடித்த குணம்...?***

சிங்கப்பூருக்கு நாடகம் போடச் சென்ற போது, 'தமிழ் முரசு' பத்திரிகையிலிருந்து என்னைப் பேட்டி காணப் போவதாக அமைப்பாளர்கள் கூறினார்கள். நான் தங்கி யிருந்த ஓட்டல் ரூம் காலிங் பெல் அடித் தது. கதவைத் திறந்த நான், ஆச்சரி யத்தில்... கனவா..? நிஜமா..? என்று என் கையைக் கிள்ளிப் பார்த்துக் கொண்டேன். முகம் மலர நின்று கொண்டிருந்தவர் (முதல்) மந்திரி குமாரி. பேட்டி எடுத்தார். நாடகம் பார்த்தார். உள்ளே வந்து மனதாரப் பாராட்டினார். எளிமையாக இருப்பது கனிமொழிக்கு இயல்பிலேயே எளிதாக இருக்கிறது.



★ **அ. ராஜா ரஹ்மான், கம்பம்.**

***சிக்கனம் - கஞ்சத்தனம்... என்ன வித்தியாசம்...?***

திருமணத்திற்குப் பிறகு மனைவி யுடன், தேன் நிலவுக்குகூடப் போகாமல் இருப்பது கஞ்சத்தனம். தான் மட்டும் சென்று, 'ஹனி மூனை', 'தனி மூன்' ஆக்கி மிச்சம் பிடிப்பது சிக்கனம்.

★ **வீ. பெரியசாமி, அரியலூர்.**

***'ஜோஸ்யத்தில்' நம்பிக்கை உண்டா?***

நான் 'ஹாஸ்யத்தை' நம்புகிறவன்.



டிப்பார்'' என்று சொல்லும் தா.பாண்டியனின் வீடு சென்னை அண்ணா நகர் விரிவாக்கத்தில் உள்ள டி.வி.எஸ். காலனியில் இருக்கிறது.

பேசிக்கொண்டே வீட்டை விட்டுக் கிளம்பி, அருகில் இருக்கும் பூங்காவுக்கு நடக்கிறார் தா.பா. வேகமாக நடைப்பயிற்சி செய்வதில்லை. சாதாரணமாக நடந்து செல்கிறார். எதிரில் சிரித்தபடி வரும் பழக்கமான முகங்கள்.

# தா.பாண்டியன்

''நான் மாநகராட்சிப் பள்ளியில் நாற்பது வருடங்கள் ஆசிரியையாகப் பணிபுரிந்து ஓய்வு பெற்றேன். எங்களுக்கு இரண்டு பெண்கள், ஒரு பையன், பேரன், பேத்திகள் என்று நிறைவான வாழ்க்கை. திருமணமாகி ஐம்பத்தொரு ஆண்டுகள் ஆகின்றன'' என்கிறார் திருமதி ஜாய்ஸ் பாண்டியன்.

''உங்களுக்கல்லவா பொன் விழா கொண்டாட வேண்டும்'' என்று நாம் சொல்லும்போதே, சிரித்தவாறு அறையிலிருந்து வெளியே வருகிறார் இந்திய பொதுவுடைமைக் கட்சியின் மாநில செயலாளர் தா.பாண்டியன். ''என் ஆரம்ப நாட்களிலிருந்தே முழு நேரக் கட்சி ஊழியனாக இருந்து வருவதால் எல்லா நாட்களும் சதா சுற்றுப்பயணம்தான். அணிந்திருக்கும் துணிகள் அழுக்கானால் மட்டுமே மறுபடியும் சலவைத் துணிகளை எடுத்துப் போவதற்காக வீட்டுக்கு வருவாரென்று மனைவிகூட கிண்டலடிப்பார்''

அரசியல்வாதியான தா.பா.விடம் மதுரை இடைத்தேர்தலைப் பற்றி ஆர்வமாக விசாரிக்கிறார்கள். ''நியாயமான முறையில் தேர்தல் நடந்திருக்கிறது. முடிவை எந்தச் சர்ச்சையுமில்லாமல் எல்லோரும் ஏற்றுக்கொள்ள வேண்டும்'' என்று சொல்கிறார். அரசியல்வாதிகள் ஆரோக்கியத்தைப் பேணிக் காப்பது பற்றி பேச்சு வருகிறது. ''இந்த நடைப்பயிற்சியோடு சரி. மற்றபடி வேறு எந்த உடற்பயிற்சியும் செய்வதில்லை. சாப்பாட்டிலும் சைவம், அசைவம் என்று இரண்டையும் மாறி மாறி வெளுத்துக் கட்டுவேன்.''

தா.பா.வுக்குப் பெரிய பிரச்னையாக இருப்பது முகவாய் அருகிலும், கால்களிலும் இருக்கும் ஆர்.டி.எக்ஸ். வெடிகுண்டுகளின் துகள்தான்.

ஆம்! 1991-ம் வருடம் ஸ்ரீபெரும்புதூரில் ராஜீவ்காந்தி மனித வெடிகுண்டால் படுகொலை செய்யப்பட்டபோது, அருகில் இருந்த, தா.பா.



பேசிக் கொண்டிருக்கும்போதே தின சரிகள் வந்து விடுகின்றன. கட்சியின் நாளிதழான 'ஜனசக்தி'யின் ஆசிரியர் தா.பா.தான். ''தலையங்கம் எழுத வேண்டியிருப்பதால் குறைந்தது நான்கு தினசரிகளையாவது ஆழமாகப் படிக்க வேண்டியிருக்கிறது'' என்று சொல்லும் இவர், புரட்சியாளர்கள் சேகுவாரா, காஸ்ட்ரோ, நெல்சன் மண்டேலா ஆகியோரது வாழ்க்கை வரலாற்றை அழகுத் தமிழில் புத்தகங்களாகப் போட்டிருக்கிறார். இவற்றைத் தவிர கம்யூனி

# வைத்த கை நாட்டு!

அதிர்ஷ்டவசமாக உயிர் தப்பினார். இருந்தும், வெடிகுண்டுத் துகள்கள் முக வாயிலும் கால்களிலும் ஊடுருவிவிட்டன.

''அந்தத் துகள்கள் ஒரே இடத்தில் நிற்காமல் அங்கேயும், இங்கேயும் நகர்ந்து கொண்டிருப்பதால் அறுவை சிகிச்சை செய்து அவற்றை வெளியே எடுப்பது மிகக் க்டினம் என்று மருத்துவர்கள் சொல்லிவிட்டார்கள். மேலும், அந்த குண்டு வெடிப்பின் அதிர்ச்சியில் என் இரண்டு கைகளும் ஆறேழு மாதங்கள் செயலற்றுப் போய்விட்டன. 1991ல் பாராளுமன்ற உறுப்பினராகத் தேர்வு பெற்றபோது ஆவணங்களில் கைநாட்டு வைக்கும்படி ஆகிவிட்டது. இப்போதுகூட பத்து நிமிடங்களுக்கு மேல் தொடர்ந்து எழுத முடியாத நிலை இருக்கிறது'' என்கிறார்.

நடைப்பயிற்சியை முடித்துவிட்டு வீட்டுக்கு வரும் தா.பா. வீட்டைச் சுற்றிப் போடப்பட்டிருக்கும் தோட்டத்தைச் சுற்றி வருகிறார். ''சென்னையில் இருக்கும் நாட்களில் காலையில் இந்தச் செடிகளைப் பராமரிப்பதில் கண்டிப்பாக ஈடுபடுவேன்'' என்று சொல்லும் தா.பா, சிறந்த மேடைப் பேச்சாளர்; எழுத்தாளர்.





**அந்தக் குண்டு வெடிப்பின் அதிர்ச்சியில் என் இரண்டு கைகளும் ஆறேழு மாதங்கள் செயலற்றுப் போய்விட்டன.**

ஸம் தொடர்பாக நிறைய புத்தகங்களும் எழுதியிருக்கிறார். 'மார்க்ஸ் சொன்ன அதே பாணியில் மொழிபெயர்க்காமல், படிப்பவர்களுக்குப் புரியும்படி எளிய தமிழில் சொல்ல வேண்டும்' என்று ஜீவா அவர்கள் அடிக்கடி கூறுவார். அதையேதான் என் எழுத்துகளிலும், மொழிபெயர்ப்புகளிலும் கடைபிடிக்கிறேன்'' என்கிறார்.

மணி எட்டைக் கடக்க, தொடர்ந்து செல்ஃபோனிலும், தொலைபேசியிலும் அழைப்புகள் வந்துகொண்டே இருக்கின்றன. பேசிக்கொண்டே மனைவி தட்டில் வைத்துக் கொடுக்கும் மூன்று தோசைகளைச் சாப்பிடுகிறார். ''நீங்கள் கலர் சட்டையே போட மாட்டீர்களாமே?'' என்று கேட்டால், ''கல்லூரி காலத்திலிருந்தே வெள்ளைச் சட்டைதான். எனக்குச் சட்டை மட்டுமல்ல மனகம், பேச்சும் வெள்ளைதான்'' என்று சிரித்தபடியே சொல்லிவிட்டு கட்சி அலுவலகத்துக்குக் கிளம்புகிறார்.

**- ப்ரியன்**

படங்கள்: **ராஜன்**



# கல்கி



2007 ஜூலை 8
சர்வஜித் ஆனி 24
மலர் : 65
இதழ் : 49

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா

- *பாரதியார்*

## குண்டர் படையை வென்ற உறுதி!

மதுரை மேற்கு தொகுதி இடைத்தேர்தலில் மெய்யான வெற்றி தேர்தல் கமிஷனுக்குத்தான்!

தொகுதி முழுவதும் அணு அணுவாக ஆராய்ந்து, வன்முறையாளர்களும் போலி வாக்காளர்களும் வெளியேற்றப்பட வழி செய்திருக்கிறது. வாக்காளர்களுக்கு இலஞ்சம் தரப்படுவதைக் கண்டறிந்து, உடனடியாக அதை நிறுத்தாவிட்டால் தேர்தலே தள்ளிவைக்கப்படும் என்று எச்சரித்திருக்கிறது.

நீண்ட நெடும் நாட்களாகத் தொகுதியில் பணியாற்றி, செல்வாக்கை வளர்த்துக் கொண்ட காவல் துறையினரையும் அதிகாரிகளையும் பணிமாற்றம் செய்தாகவேண்டும் என்று போராடி சாதித்திருக்கிறது. காவல்துறையின் இடத்தில் மத்திய ரிசர்வ் போலீஸ் படையையும் இராணுவத்தையும் கொண்டுவந்து நிறுத்தி, வாக்குச் சாவடிகளில் வாக்காளர்களுக்குப் பாதுகாப்பு அளித்திருக்கிறது. காவல் துறையினர் வாக்குச் சாவடிகளுக்கு வெளியேதான் (நூறு மீட்டருக்கு அப்பால்) கண்காணிப்புச் செய்திருக்கிறார்கள்!

வாக்குச் சாவடிகளில் வழக்கமான கண்காணிப்பாளர்களுடன் இருபது கூடுதலான உலாவும் கண்காணிப்பாளர்களை நியமித்திருக்கிறது. இவையெல்லாம் போதாதென்று சாவடிக்குச் சாவடி இரகசிய கண்காணிப்புக்கும் ஏற்பாடு செய்து, மக்கள் அச்சமின்றி வாக்களிக்க உதவியிருக்கிறது.

இது வரலாறு காணாத பந்தோபஸ்து ஆனதால், வழக்கத்துக்கும் அதிகமான வாக்குப்பதிவு நடந்தேறியிருக்கிறது. 75 சதவிகிதம் என்பது உத்தேசக் கணிப்பு. இது, இத் தொகுதியில் 2006 பொதுத் தேர்தலில்கூட நிகழாத விந்தை.

இத்தனை முயற்சிகளும் போர்க்கால எச்சரிக்கையும், குறைந்த






அளவு வாக்காளர்களே உள்ள ஒரு சிறிய தொகுதிக்கு! அப்படியானால் பல்வேறு தொகுதிகளில் ஒரு சேர வாக்குப் பதிவு நடந்தால், தேர்தல் கமிஷன் என்ன பாடு படவேண்டியிருக்கும்!

தேர்தல் வன்முறையும் முறைகேடுகளும் நமது அரசியல்வாதிகளால் செழிப்பாக வளர்க்கப்பட்டு, தேர்தல் கமிஷனுக்குச் சவால் விடுகிற அதே சமயத்தில், ஜனநாயகத்தையும் கேலிக்கூத்தாக மாற்றிவிட்டன. மக்கள் இயல்பாக தங்கள் ஜனநாயக கடமைகளைச் செய்வதற்கும் உரிமைகளை நிலை நாட்டுவதற்கும் ஏதுவான சூழல் இன்று தமிழகத்தில் கிடையாது என்பது மறுபடி நிரூபணமாகியிருக்கிறது. அரசியலில் புகுந்துவிட்ட குண்டர் கலாசாரமும் கட்சிகளிடையேயான ஆரோக்கியமற்ற பரஸ்பர விரோதமுமே இதற்குக் காரணம்!

மதுரை மேற்குத் தொகுதி இடைத்தேர்தல் பிரசாரத்தினூடே வன்முறை தலைகாட்டியிருக்கிறது. தேர்தல் ஆணையாளர் நேரில் வந்து பார்த்து, தேர்தலுக்குச் சில தினங்களுக்கு முன்புவரை அமைதியும் சகஜ நிலையும் திருப்திகரமாக இல்லை என்று கூறியிருக்கிறார்.

தலைவர்களோ, தேர்தல் கமிஷனின் அதிகாரத்தை மதிப்பதற்குப் பதிலாக, கேள்விக்குட்படுத்தியிருக்கிறார்கள். ''தேர்தல் ஒத்திவைக்கப்பட்டால் உண்ணாவிரதம் இருப்பேன்'' என்று தமிழக முதல்வர் சொன்னதாகவும் பிறகு சொல்லவில்லை என்றும் செய்திகள்! முதல்வர் அப்படிச் சொல்லாவிட்டாலும் முதல்வர் சொன்னதாக ஒரு மத்திய அமைச்சர் சொல்வதென்பதேகூட வரம்புமீறல்தான்.

இது மிரட்டலுக்குச் சமமாகும் என்று எடுத்துக் காட்டியதுடன், இந்த மிரட்டலுக்கோ அழுத்தத்துக்கோ தேர்தல் கமிஷன் பணிந்துவிடாமல் தேர்தலை ஒத்திவைக்கும் உரிமை தனக்கு உண்டு என்று உணர்ந்து, கடைசிவரை உறுதியாக இருந்திருக்கிறது.

இந்த உறுதியின் விளைவாக மதுரை மேற்குத் தொகுதி இடைத் தேர்தல் பெருமளவு அமைதியாக நடந்து முடிந்திருக்கிறது. ஆனால், 'ஒரு கட்சி வேட்பாளரின் வெற்றி, ஜனநாயக நல்மரபுகளின் வெற்றியாகவும் மாறுவது எப்போது?' என்கிற கேள்வி மக்கள் மனத்தில் நிலவத்தான் செய்கிறது. ●

# கலங்க வைத்த 'சந்துரு!'

எக்ஸ்னோராவின் கலை-கலாசார கிளையாக சென்னை - இந்திரா நகர் பகுதியில் ஆரம்பிக்கப்பட்டது 'ஹம்சத்வனி சபா.' அதன் செயலாளர் ராமச்சந்திரன் ஸ்பான்ஸர்களை ஆகர்ஷித்து நிகழ்ச்சிகளைச் சிறப்பாக அமைத்ததுடன் உறுப்பினர்களின் துணையோடு நிவாரண நிதி திரட்டுவது, நிதி நிலை அறிக்கை அலசல், சுதந்திரப் பொன் விழா கொண்டாட்டம், அமரர் கல்கி நூற்றாண்டு சிறப்பு நிகழ்ச்சி என பல தளங்களில் சபாவை ஈடுபடுத்தினார். அண்மையில் மறைந்தவருக்கு சபா நடத்திய அஞ்சலி நிகழ்ச்சியில் பல தரப்பினர் நினைவுகளைப் பகிர்ந்து கொண்டனர்...

**'ஸ்ருதி' ஆசிரியர் ராம்நாராயண்:**

வயதில் பெரியவரானாலும், தலைமுறை இடைவெளி பார்க்காதவர் ராமச்சந்திரன். அவரும் நானும் ஓர் ஆங்கில மாலை நாளிதழில் பணியாற்றினோம். ஒருமுறை அனாவசியமாக, நிறுவனரின் மனைவியிடம் மன்னிப்புக் கேட்கச் சொன்னார் ஆசிரியர். ராமச்சந்திரன் துணிச்சலோடு ஆசிரியரிடம் போய், ''உங்கள் பதவிக்கே இழுக்கைத் தேடித் தந்து விட்டீர்கள்'' என்று முகத்துக்கு நேரே சொல்லி விட்டார். ஆனால், உதட்டில் புன்னகை மட்டும் இருந்தது.

**டி.வி. வரதராஜன், நாடக நடிகர், இயக்குனர்:**

மூன்று வருடங்களுக்கு முன், ஹம்சத்வனியில் நாடகங்களையும் போட அழைத்தார் ராமச்சந்திரன். அவருக்குச் செல்லப் பெயர் 'சந்துரு.' 'கலக்கறே சந்துரு, பிரமாதம்' என்ற நாடகத்தைப் போட்டபோது, அவர் பூஜைக்கு வந்து பூக்களைக் கொடுத்து ஆசி வழங்கினார். இன்று அவர் படத்துக்கு நான் பூக்கள் போட வேண்டியிருப்பதை நினைத்து வருத்தப்படுகிறேன். 'கலக்கறே சந்துரு' என்று அவரைத்தான் பாராட்டிச் சொல்ல வேண்டும். ஆனால், இன்று அவர் 'கலங்க வைத்த சந்துரு'வாகி விட்டார்.

**'ஹிந்து' என்.முரளி:**

பத்திரிகைத் துறையில் என்னுடைய இருபதைந்து வருட நண்பர். ஜூனியர்களை அழகாகப் பயிற்றுவிப்பார். அறுபது வயதுக்கு முன்பாகவே ஓய்வு எடுத்துக் கொண்டு, அவருக்கு விருப்பம் இருந்த இசைத் துறையில் புகுந்து, ஹம்சத்வனியை நிறுவினார். மருத்துவ மனையில் பார்த்தேன். பிரிஸ்கிருப்ஷன் தாளின் பின்னால், அப்போது நடந்து கொண்டிருந்த இசை நிகழ்ச்சிகளுக்கு எப்படிப் பேச வேண்டுமென குறிப்பு எழுதி வைத்திருந்தார்!

நினைவு அஞ்சலி



* 'ஹம்சத்வனி' ராமச்சந்திரன்

- சாருகேசி







**பிராம்மணர் இல்லத் திருமணம் பற்றிய முழுமையான முதல் புத்தகம்**

# "அக்னி, அம்மி, அருந்ததி"

பாலிகை தெளித்தல், பந்தக்கால் பூஜை போன்றவற்றில் எந்த தேவதைகளை ஆவாஹனம் செய்கிறோம்? நுகத்தடி வைப்பது ஏன்? "மாங்கல்யம் தந்துனா"வின் பொருள், சப்தபதீயின் முக்கியத்துவம், விவாஹ ஹோமங்கள் பற்றி சிலப்பதிகாரம், சீவகசிந்தாமணி, பதிற்றுப்பத்து என்ன சொல்கின்றன? கம்பனின் ராமர் செய்த யாத்ரா தானம், வால்மீகியின் ஜனகர் செய்த கன்யாதானம், துளசிதாஸரின் தசரதர் செய்த நாந்தீ சிராத்தம் பற்றிய விவரம்.

முக்கியமான விவாஹ மந்திரங்கள் தமிழிலும் தேவநாகரியிலும், தமிழ் அர்த்தம், பல்வேறு உட்பிரிவினர், பல ஊர்களைச் சேர்ந்தவர்கள் அனுசரிக்கும் சம்ப்ரதாயங்கள், ஜாதகம் பார்த்தல், திருமணம் பதிவு செய்தல், சீமந்தம், உபநயனம், சஷ்டியப்தபூர்த்தி பற்றிய குறிப்புகள் அடங்கியது. ஸ்ரீமத் ஆச்சார்யாள் ஸ்ரீமுகம், தலைமை தேர்தல் ஆணையர் ஸ்ரீ என். கோபாலஸ்வாமி மற்றும் பலரின் அணிந்துரையுடன் வெளி வந்திருக்கிறது.

ரூ. 80/- (ஆசிரியர் N.S. Natarajan)




N.S. Natarajan, L-23/4, 26th Cross Street, Besant Nagar, Chennai-600 090. என்ற விலாசத்திற்கு ரூ. 100/- அனுப்பினால் பதிவு தபால் அல்லது கூரியரில் அனுப்பப்படும். VPP மூலமும் பெறலாம் சென்னை வாசிகள் ரூ. 80/- மட்டும் அனுப்பவும்.

தொலைபேசி 044-24469125, 9940169125

**சென்னையில் சில கடைகளிலும் கிடைக்கும்**

# காந்தே...



சர்வஜித் பரிசுப் போட்டி எண் 6ல் உற்சாகத்துடன் கலந்து கொண்ட அனை வருக்கும் நன்றி. கல்கி (15.04.07) இதழில் இடம் பெற்றிருந்த அறிஞர் களின் பொன்மொழிகளைக் கண்டுபிடி யுங்கள். அத்துடன் நீங்களும் அது போன்ற பொன்மொழிகள் மூன்றை எழுதி யனுப்புங்கள் என்று சொல்லியிருந்தோம். சரியான விடையளித்து, சிறந்த பொன் மொழிகள் எழுதிய ஆறு பேரைத் தேர்ந் தெடுத்துள்ளோம்.

*சரியான விடை:* 'காதல் நந்தவனம்' பகுதியில் பொன்மொழிகள் இடம் பெற்றுள்ளன.

- காதலின் கண்ணுக்கு ரோஜாதான் தெரியும்; முட்கள் தெரியாது.
  - ஜப்பான்
- வானத்தில் பறவையின் பாதை யைக் காண முடியாது. காதலியை நாடும் காதலன் பாதையையும் காண முடியாது. - எஸ்தோனியா
- பரிசுத்தமான இதயம் பெண்ணின் பெருமை வாய்ந்த பரம்பரைச் சொத்து. காதல்தான் அவளது அழகிய ஆபரணம்.
  - கிளாடியஸ்

**-அ.சா.குருசாமி, செவல்குளம்**

**கா**தலிக்காமல் இருப்பதைவிட காதலித்துத் தோல்வி அடைவது சுகமானது தான். - டேனிஷன்

வாழ்க்கையின் பெரிய மகிழ்ச்சியே, நம்மையும் மீறி நாம் காதலிக்கப் படு கிறோம் என்பதுதான். - விக்டர் ஹீயூகோ

காதலிக்காத மனிதன் இனிமேல்தான் பிறக்க வேண்டும். - கார்க்கி

**- பி.புவனேஷ், மா.சாவடி**

**கா**தல் என்பது போரைப் போலத் தான்! ஆரம்பிப்பது சுலபம். நிறுத்துவது மிகக் கடினம். - ஹெச்.எல்.மென்கென்

காதல் என்பது தன்னை ஏமாற்றுவதில் தொடங்கி பிறருக்கு ஏமாற்றத்தில் முடி கிறது. - ஆஸ்கார் ஒயில்டு

கல்யாணத்துக்கு முன் காதல் என்பது, போரடிக்கும் புத்தகத்துக்குப் பளிச்சென்று முன்னுரை அமைந்திருப்பதுபோல்தான்.

- வில்லியம் மிஜ்னர்

**- எஸ்.சுவாமிநாதன், மன்னார்குடி**

## லட்ச ரூபாய் பரிசுப் போட்டி முடிவு

**இ**யற்கையின் நியதிப்படி

# பரிசுக் காற்றே!

காதல் என்பது ஒரு வெறி உணர்ச்சியே. இந்த வெறிக்கு, பகுத்தறிவு பெற்ற மனித வர்க்கம், காதல் முலாம் பூசி ஒரு கட்டுத் திட்டத்திற்குள் வைத்திருக்கிறது. -மாபஸான்

காதல் தன்னலம் நாடாது. பிறர் நலம் நாடி உழைக்க, எத்தகைய தியாகத்துக்கும் உட்பட துணிவு ஊட்டும்.

- திரு.வி.க

வில்லுக்கு நாணைப் போல் ஆணுக்குப் பெண். ஒன்றில்லாமல் ஒன்றினால் பயனில்லை.

- வேர்ட்ஸ்வொர்த்

**- எஸ்.கௌரிலக்ஷ்மி, திருச்சி**

காதல் பிரியும் வரை அதன் ஆழத்தை அறிவதில்லை!

- கலீல் கிப்ரான்

**- கவிதா கிருபாகரன், கரும்பூர்**

**வா**ழ்க்கையின் உச்சபட்ச சந்தோஷம் நாம் காதலிக்கப்படுவதுதான்.

- விக்டர் ஹியூகோ

காதலிப்பது வலிமையைக் கொடுக்கிறது; காதலிக்கப்படுவது தைரியத்தைத் தருகிறது. - லாவ்ட் ஜா

எதிர்பார்க்கும் அளவு கிடைக்காததும், எதிர்பார்க்கிற அளவு கொடுக்கப்படாததும் காதல் மட்டுமே!

- ஹென்றி மில்லர்

**- சி.ஆர்.நாகராஜன், பொள்ளாச்சி**



**நா**ம் நேசிப்பதை என்றாவது ஒரு நாள் இழப்போம் என்பதை உணர்வது தான் காதல்.

- ஜி.கே.செஸ்டர்டன்

முதல் காதலின் சிறப்பே, அது எப்போது வேண்டுமானாலும் முடிவுக்கு வந்துவிடும் என்பதை நாம் உணராதது தான்! - பெஞ்சமின் டிஸ்ரேலி

**'சில்'லென காதல் பொன்மொழிகளை எழுதிய இவர்கள் ஒவ்வொருவருக்கும் சுகமான காற்றை அளிக்கும் ஒரு சீலிங் ஃபேன் பரிசாக அளிக்கப்படுகிறது.**

**போ**லீஸ் ஸ்டேஷன், புகார், எஃப்.ஐ.ஆர் - இவையெல்லாம் ஏதோ கெட்ட வார்த்தைகள் என்பதுபோல், கேட்டாலே ஒதுங்குவது நம் போக்காக இருந்து வருகிறது. ஆனால், நமக்கு அநீதி அல்லது குற்றம் இழைக்கப்படும்போது 'ஐயோ அங்கே என்ன ஆகுமோ; நமக்குப் பழக்கமே இல்லையே'என்ற தயக்கத்தை, தூக்கியெறிந்துவிட்டுத் தைரியமாக போலீஸ் ஸ்டேஷனுக்குச் செல்லுங்கள். அங்கு நாம் மரியாதையோடு நடத்தப்பட வேண்டும் என்பது உச்சநீதிமன்றத்தின் ஆணை.

முதலில் புகாரைக் கொடுக்க வேண்டும். அதை வாங்கிக் கொள்ளும் காவல் விசாரணை அதிகாரி, புகார், சட்டத்தின் எந்தப் பிரிவின் கீழ் வருகிறது என்று பார்த்து முடிவு செய்து, முதல் தகவல் அறிக்கை (எஃப்.ஐ.ஆர்.) பதிவு செய்வார்.

● சட்ட ரீதியாக விசாரிக்க முடியாவிட்டால் காவல் அதிகாரி, 'இந்த வகை புகாரைச் சட்டத்தின் அடிப்படையில் விசாரிக்க முடியாது. எனவே, வேறு அமைப்புகளின் மூலமாக நிவாரணம் தேடிக் கொள்ளவும்' என்று எழுத்து மூலமாக பதில் கொடுக்க வேண்டும்.

கொலை, கொள்ளை, அடிதடியில் காயம் போன்ற நீதிமன்ற இறுதி முடிவுக்கு விடத்தக்க கிரிமினல் குற்றங்களுக்கு, காவல் துறை உடனடியாக முதல் தகவல் அறிக்கை போட்டே ஆக வேண்டும்.

● குடும்பத் தகராறு, வரதட்சணைக் கொடுமை, பண மோசடி, போன்ற விவகாரங்களில் கொடுக்கும் புகாரைப் பெற்றுக் கொண்டு, CSR (Current serial number) என்ற ரிஜிஸ்டரில் பதிவுசெய்து புகாரைப் பெற்றுக்கொண்டதாக ரசீது கொடுக்கிறார்கள். ஆனால், போலீஸ் இவற்றுக்கு முதல் தகவல் அறிக்கை போடுவதில்லை. 'புகார் கொடுத்தவர் எஃப்.ஐ.ஆர். போடுங்கள்' என்று வலியுறுத்தினால் கட்டாயம் போட்டுத்தான் ஆகவேண்டும்.

ஆனால் காவல் துறை, ''நீங்க இப்படிப் புகார் சொல்றீங்க. ஆனா நீங்க குற்றம் சாட்டுகிற மனிதர் தரப்பு வாதம் என்னவென்று தெரிந்துகொண்டுதான் எஃப்.ஐ.ஆர். போடுவோம்'' என்று சொல்

# எஃப்.ஐ.ஆர். -



லக் கூடும். எனவே, CSR என்ற ரசீதைக் கொடுத்துவிட்டு, ''இரண்டு நாள் கழிச்சு வாங்க பார்க்கலாம்'' என்று சொல்வார்கள். இடையில் கட்டப் பஞ்சாயத்து புகுந்து விளையாட வாய்ப்பு இருக்கிறது. எனவே, விடாப்பிடியாக எஃப்.ஐ.ஆர். போட வைக்க வேண்டும்.

போடும் எஃப்.ஐ.ஆர்.-ல் ஒரு காப்பியை புகார் கொடுத்தவருக்குக் கட்டாயம் கொடுக்க வேண்டும். எஃப்.ஐ.ஆர். போடப்பட்டு விட்டது என்றால், அந்தப் புகாரைத் தீவிரமாக விசாரித்து, தகுந்த நீதிமன்றத்தில் குற்றப் பத்திரிகை தாக்கல் செய்து, வழக்கை நடத்தி, குற்றம் சாட்டப் பட்டவரைக் கைது செய்து, இறுதிவரை அதை எடுத்துச் சொல்ல வேண்டிய பொறுப்பு காவல் துறைக்கு இருக்கிறது.



**எஃப்.ஐ.ஆர். பதிவு செய்யாத போலீஸ் அதிகாரி மீது, வழக்குப் பதிவு செய்து கோர்ட்டுக்கு இழுக்க முடியும்!**

எனவே, எஃப்.ஐ.ஆர். பதிவு செய்வதையே மிகவும் யோசித்து, பின்னரே பதிவு செய்கிறார்கள்.

அப்படி எஃப்.ஐ.ஆர். பதிவு செய்யும்போது, புகார் கொடுத்த பார்ட்டி மிகவும் உஷாராக அதில் சொல்லப்படும் குற்றவியல் சட்ட விதிகளைத் தெரிந்து கொள்ள வேண்டும். 'கொலை செய்யும் நோக்கத்துடன் அரிவாளோடு வந்தான்' என்று புகாரில் இருக்கும்போது அந்தப் புகாருக்கு, தண்டனை மிகக் கடுமையாக இருக்கும்.' இதையே 'அரிவாளை' கட் செய்துவிட்டு பதிவு செய்யப்படும் எஃப்.ஐ.ஆர். மிகவும் நீர்த்துப் போய், குற்றம் சாட்டப்பட்டவருக்குச் சாதகமாகவே முடியும். இது ஓர் உதாரணம்தான். இதேபோல் சகல வகை குற்றங்களிலும் இறுதியில் நீர்த்துப் போகச் செய்யும் அளவுக்கு எஃப்.ஐ.ஆர். பதிவு செய்யப் படும் ஆபத்து உண்டு. எனவே, வழக்கறிஞர் உதவியுடன், புகாரைப் பதிவு செய்ய வேண்டும்.

# ஓர் எச்சரிக்கை!

எஃப்.ஐ.ஆர். பதிவு செய்யாத போலீஸ் அதிகாரி மீது வழக்கு பதிவு செய்து கோர்ட்டுக்கு இழுக்க முடியும்.

ஒரு போலீஸ் ஸ்டேஷனில் புகார் கொடுத்து எஃப்.ஐ.ஆர். போட்ட பின்னர் தேவை ஏற்படின் அதை வேறொரு போலீஸ் ஸ்டேஷனுக்கும் மாற்றிக் கொள்ளலாம்.

**- கௌசி**

பல் விழுந்து விட்டது. விபத்து ஒன்றில் ஒரு பல் போய்விட்டது. சாலை விபத்தல்ல, காலை விபத்து. மருமகள் நாஷ்டாவுக்குப் பாசத்தோடு பரிமாறிய பொங்கலில் கிடந்த கல் ஒன்று பல்லைப் பதம் பார்த்துவிட்டது.



கல் உடைத்தது பாதிப் பல். தள்ளாடிக் கொண்டு ஹிம்சை பண்ணிக் கொண்டிருந்த மீதிப் பல்லைப் பிடுங்க, பல் டாக்டரிடம் போனேன். பல்லைச் சுற்றி ஈறுப் பகுதிக்குள் மயக்க ஊசி போட்டு, மரத்துப் போகச் செய்து பூப்போல பல்லைப் பிடுங்கி விட்டார்.

ஃபீஸ் எவ்வளவு என்று டாக்டர் சொல்லும் வரை வலியே தெரியவில்லை எனக்கு.

உடைந்து போன பல்லைப் பிடுங்கியாச்சு. சரி, அந்தக் கண வாயில் ஒரு பொய்ப் பல்லைப் பொருத்த வேண்டுமே! பிடுங்குவதற்கே இவ்வளவு ஃபீஸ் என்றால் பொருத்துவதற்கு இன்னும் அதிகமாயிருக்குமே என்று கிலியெடுத்தாலும், மெது வாய் டாக்டரிடம் கேள்வியை வைத்தேன். பொய்ப் பல் கட்டுகிற நடைமுறைகளைப் பிரஸ்தாபிப்பதற்கு முன், ஓர் உண்மையை டாக்டர் புட்டு வைத்தார்.

ஒரு பல்லை இழந்துவிட்ட பல் வரிசை, கோர்வையிழந்து வேர்கள் ஆட்டம் கண்டு போகுமாம். ஈறுகளும் வலு விழந்திருக்குமாம். மாற்றுப்பல் பொருத்தும் முன் பல்வரிசையை எக்ஸ்ரே எடுக்க வேண்டுமாம். அதற்கொரு இருநூற்று ஐம்பது ரூபாயாம். லபக்கென்று நான் வாயை மூடிக் கொண்டேன்.

'பயப்படாதீங்க. எக்ஸ்ரே இங்க இல்ல. வெளியதான் எடுக்கணும்' என்று என் காலிப் பல்லுக்கும் காலி பர்ஸுக்கும் மூச்சுவிட அவகாசம் கொடுத்தார் டாக்டர்.

''அண்ணா நகர்ல நம்ம ஆத்துக்குப் பக்கத்திலேயே டெண்ட்டல் எக்ஸ்ரே லாப் ஒண்ணு இருக்கு டாக்டர்'' என்றதற்கு, டாக்டர் பலமாய்த் தலையாட்டி மறுத்தார்.

சென்னை மாநகரத்தின் வடக்குக் கோடியில், கிட்டத்தட்ட ஆந்திரப் பிரதேசத்தின் பார்டரில் ஓர் இடத்தைச் சொன்

ஏ.ஏ.ஹெச்.கே.கோரி



# வாய் மாறிய பல்!

னார். அங்கேதான் கலைநயத்தோடு எக்ஸ்ரே எடுப்பார்களாம். டாக்டருக்குக் கப்பம் கட்டுகிற இடமாய் இருக்கும்.

**மா**நகரப் பேருந்தில் பாதியும், பொடி நடையில் மீதியுமாய் வடசென்னையை அடைந்து, நிழற்பட ஸ்டூடியோவைக் கண்டுபிடித்து, முப்பத்தோரு பற்களையும் படம் பிடித்துக் கொண்டு வந்து டாக்டரிடம் காட்டிய போது, அவர் அதை ஆர்வத்தோடு ஆராய்ந்தார். முடிவில் என் மேல் பிரயோகிப்பதற்கு என்று சில அணுகுண்டுகளை ரெடியாய் வைத்திருந்தார்.

''கம்ஸ் எல்லாம் ரொம்ப வீக்கா இருக்கு சார். ஸ்ட்ராங் ஆக்கறதுக்கு சர்ஜரி செய்யணும். தையல் போட வேண்டியிருக்கும். நாலு ஸிட்டிங் தேவைப்படும். ஒவ்வொரு ஸிட்டிங்குக்கும் ஆயிரத்து ஐந்நூறு ரூவா ஆகும்.''

'அப்ப நாலு ஸிட்டிங்குக்கு...' என்று நான் தடுமாறிக் கொண்டிருந்தபோது, 'ஆறாயிரம் ரூவா' என்று முகம் மலர்ந்தார் டாக்டர். கணக்கிலும் கில்லாடி!

''இது இனிஷியல் சர்ஜரிதான். அப்புறம் இன்னொரு எக்ஸ்ரே எடுக்கணும். அதுக்கு இன்னொரு இருநூத்தி ஐம்பது ரூவா! அவ்வளவுதான் சார். அதுக்கு அப்புறம் பல் கட்டிர வேண்டியது தான்.''

''அதுக்கு தனி சார்ஜா டாக்டர்?''

''தனி சார்ஜாவா? மெய்ன் ஐட்டமே அதுதானே சார்!''

''மொத்தமா எல்லாத்துக்கும் சேத்து

எவ்வளவு ஆகும்னு சொன்னிங்கன்னா...''

''என்ன, மொத்தமா ஒரு பதினஞ் சாயிரம் ஆகும் சார்.''

பல் கட்டப் பதினஞ்சாயிரம் என்றதும் எனக்குப் பல்ஸ் விழுந்து விட்டது.

ஒரு மாதிரி சமாளித்துக் கொண்டு பல் டாக்டரிடம் பிரியாவிடை பெற்று கிளம்பினபோது, டாக்டர் இன்னுமொரு முக்கியமான சங்கதியைச் சொன்னார்.

''பல் புடுங்கின இடம் பள்ளமாயிருக் கும். நாக்கை வச்சு அங்க துழாவாதீங்க.''

இதை அவர் சொல்லாமல் இருந்திருக்க லாம். துழாவக் கூடாது என்று டாக்டர் சொன்னதிலிருந்து நாக்கு நமநமக்கத் தொடங்கிவிட்டது. நாக்கின் கவனத்தைத் திசை திருப்ப, நான் ரிட்டயர் ஆன அன்று ஆஃபீஸில் கொடுத்த பார்ட்டியில், டபுள் டபுளாய் சுவைத்த மைசூர்பாகை அதற்கு நினைவூட்டினேன்.

ரிட்டயர் ஆனபின் கையில் வந்த தொகை தவப்புதல்வனை இஞ்சினீயரிங் காலேஜில் சேர்க்க வாங்கின கடனை அடைக்கச் சரியாய்ப் போனது.

''அப்பா, நீங்க பென்ஷன் வர்ற ஒரு வேலையாப் பார்த்து அந்தக் காலத்துலயே சேர்ந்திருக்கக் கூடாதா'' என்று அடிக்கடி விசனப்படுவான் மகன்.

அடிக்கடி என்றால் ரொம்ப அடிக்கடி இல்லை. நான் ட்ரான்ஸிஸ்டருக்கு பாட்டரி வாங்க, ஜட்டி பனியன் வாங்க, ஷேவிங் க்ரீமுக்கு, பிளேடுக்கு என்று அவனிடம் விண்ணப்பம் வைக்கிறபோது மட்டும்தான்.

'ஒங்க முகத்துக்கு தாடி ரொம்ப அழகா இருக்கும் மாமா. என்னைக் கேட்டா, நீங்க டெய்லி ஷேவ் பண்ணிக்கிறது அநாவசி யம்' என்று என் முக வசீகரத்துக்கு டிப்ஸ் கொடுப்பாள் மருமகள்.

அவள் சொன்னாலும் சொல்லா விட்டாலும் நான் வசீகரன்தான். எக்ஸர் ஸைஸ் பாடி வேற. அறுவத்தி மூணு வயசு என்றால் யாரும் நம்ப மாட்டார்கள். குறிப்பாக ரெயில்வே டிக்கட் பரிசோதகர். எதுக்கடா வம்பு என்று, ஸீனியர் ஸிட்டிஸன் மமதையையெல்லாம் ஓரங் கட்டிவிட்டு, ஐம்பத்து மூணு வயசு என்று போட்டு முழு டிக்கட்தான் எடுப்பேன்.

என்னுடைய அந்த வசீகரமான முகத் தோற்றத்துக்கு இப்போது ஒரு பங்கம் வந்துவிட்டது. பிடுங்கப்பட்டது கடவாய்ப் பல்லானதால், இடது கன்னம் உள்வாங்கி, டொக்கு விழுந்து விட்டது போன்ற ஒரு மினி கிழட்டுத் தோற்றம். இந்த இழுக் குக்கு ஒரு முடிவு கட்டி, நான் பழைய அழகைத் திரும்பப் பெறவேண்டுமா னால், உடனடியாய்ப் பல்லைக் கட்டியே ஆக வேண்டும்.

அதற்கு மகனிடம் பல்லைக் காட்டியே ஆக வேண்டும். காட்டினேன்.

''பதினஞ்சாயிரமா!'' என்று பதறிப் போனான்.

''நீங்க ஜி.ஹெச்சுக்குப் போயிருந்தீங் கன்னா ஃப்ரீயாவே பண்ணியிருப் பாங்களே'' என்று ஒரு கண்டுபிடிப்பை என் கவனத்துக்குக் கொண்டு வந்தான்.

''நேத்து கூட இலவசப் பல் சிகிச்சை முகாம்னு ஒரு பேனர் பார்த்தேன். ரோட்டரி க்ளப்ல நடத்தறாங்களாம்.. அங்ககூட நீங்க போகலாம்...''



**"இது மாமாவோட பல்தான்! என்ன அதிசயம் பாருங்க, மாமாவுக்கு விழுந்த பல், அவரோட பேரனுக்கு மொளைக்குது!"**



''சிவாஜியின் அம்மா அவரிடம் என்ன சொன்னாங்க?''

''வெள்ளையாப் பெத்தா அழுக்காயிடு வேன்னு கறுப்பாக பெத்ததா சொன்னாங்க சார்.''

-ராஜ்



''பதினஞ்சாயிரம் ரூவாய்க்கு இவ்ளோ யோசிக்கிறியேடா, எத்தன லட்சம் செல வழிச்சு உன்ன இஞ்ஜினியரிங் படிக்க வச்சேன்'' என்று என் தரப்பு நியாயத்தை அவனுக்கு உணர்த்தத் தலைப்பட்டபோது, அவனுடைய எதிர்வாதத்தால என் நியா யத்தைத் தவிடு பொடியாக்கினான்.

''அந்த நன்றிக்குத்தானேப்பா, எம் மகனுக்கு, அதாவது ஒங்க பேரனுக்கு ஒங்க பேர வச்சிருக்கேன்!''

''பேர் வச்சாத்தாண்டா பேரன்'' என்று நான் முணுமுணுத்தது அரவமில்லாமல் அடங்கிப் போனது, கணவனின் பேச்சு சாதுர்யத்துக்கு சபாஷ் போட்ட என் அருமை மருமகள் எழுப்பிய கரவொலி யில்.

தாய் கைதட்டுவதைப் பார்த்து என் பேரனும் கைகொட்டிச் சிரித்தான்; பொக்கை வாயைப் பிளந்தபடி.

அவன் பக்கம் திரும்பிய மருமகள் முன்னிலும் அதிகமாய்க் குதூகலித் தாள்.

''என்னாங்க, என்னாங்க, இங்க வந்து பாருங்களேன். இவனுக்கு ஒரு பல் மொளைச்சிருக்குங்க!''

பெற்றவர்கள் இரண்டு பேரும் குழந் தைக்குப் பல் முளைத்திருக்கிற விசேஷத் தைப் பார்த்துப் புளகாங்கிதப்பட்டுக் கொண்டிருக்கிறபோதே, மருமகள் மீண்டும் திருவாய் மலர்ந்தருளினாள்.

என்ன அதிசயம் பாருங்க. இது மாமா வோட பல்தாங்க! மாமாவுக்கு விழுந்த பல், அவரோட பேரனுக்கு மொளைக்குது!

அந்த 'அதிசயம்' என்னைச் சுருக் கென்று தைக்க, 'எல்லாம் அவன் செயல்டீ' என்று விட்டத்தை சுட்டிக்காட்டி என் மகன் அதிசயத்துக்குப் புதுப் பரிமாணம் கொடுத்தான்.

மொத்தத்தில் என்னிடம் இறந்து போன பல், என் பேரனிடம் மறுபிறவி எடுத்துவிட்டது என்பது சந்தேகத்துக்கு இடமின்றி ஸ்தாபிக்கப்பட்டுவிட்டது.

ஆகவே, இதனால் அறியப்படுவது என்னவென்றால், எனக்குப் பல்கட்டக் காத்துக் கொண்டிருக்கிற டாக்டருக்கு ஒரு வேலை மிச்சம். பதினஞ்சாயிரம் நஷ்டம். பல் இருந்த இடத்தில் ஒரு பள்ளம் எனக்கு நிரந்தரம்.

டொக்கு விழுந்த கன்னத்தைத் தடவிப் பார்த்தபோது, மனசு வேதனைப்பட்டது. என் கையாலாகாத தனத்தை நினைத்துக் கண்கள் பனிக்கப் பார்த்தன.

வேதனைப்பட்டோ, கண்ணீர்விட்டோ என்ன செய்ய? எல்லாம் அவன் செயல்!

நாக்கு நமநமத்தது.

நாக்கை நாப்பத்தஞ்சு டிகிரி வளைத்து, பல்லிருந்த பொந்தை ஆசை தீரத் துழாவி னேன்.

●



"கற்பனை என்னும் சரஸ்வதியை விஷுவல் கம்யூனிகேஷன் மற்றும் மாஸ் கம்யூனிகேஷன் படிப்புகளில் பயன்படுத்தினால், காசு என்னும் லக்ஷ்மி உங்களிடம் கொட்டோ கொட்டு என்று கொட்டும் என்று விளக்குகிறார், 'சாஃப்ட்வியூ' ஊடகவியல் கல்வி நிறுவனத்தின் நிர்வாக இயக்குனர் ஆண்டோ பீட்டர்.

''வெளிநாடுகளில் உள்ள நிறுவனங்கள் சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பே மீடியா தொடர் புள்ளவர்களைப் பணிக்கு அமர்த்தத் துவங்கிவிட்டன. தங்கள் நிறுவனங்களுக்கு என்று தனியாக, குறும் படங்கள், விளம்பரப் படங்களைத் தயாரிக்கவே இந்த ஊழியர்கள். இப்போது அந்த வழக்கம் இந்தியாவில் பரவ ஆரம்பித்த பிறகு, நமது இந்தியத் தயாரிப்புகளைப் பார்த்து உலக நாடுகள் வியந்து நிற்கின்றன.

இந்தியாவில் நாளுக்குநாள் செய்தி நிறுவனங்கள், தொலைக்காட்சி நிலையங்கள், வானொலி நிலையங்கள் போன்றவை பெருகி வருகின்றன. இந்தத் துறையில் தனியார் நிறுவனங்களின் முன்னேற்றங்களாலும், விளம்பரத் துறை மற்றும் கிராஃபிக்ஸ் அனிமேஷன் துறைகளில் வேலை வாய்ப்புகள் ஏராளமாகப் பரவிக் கிடக்

# "மாணவர்களின் மாஸ்...



கின்றன. விஷுவல் கம்யூனிகேஷன், மாஸ் கம்யூனிகேஷன் படித்தவர்கள் திரைப்படத் துறையிலும் மிளிர முடியும். திரைப்படக் காட்சிகளில் டயனோஸர் எனும் உயிரினம் உலவியதைப் பார்த்தோமே, அந்தக் காட்சி இப்படிப்பட்ட கிராஃபிக்ஸ் முறையில் ஷூட் செய்யப்பட்டதுதான். உதாரணமாக ஒரு கண் இமையை மிக மிகப் பெரிதாக்கி, அதன் கேசம் ஒவ்வொன்றையும் தூண்களாக்கி இரண்டு தூண்களுக்கு நடுவே ஓர் உத்திரத்தைப் பொருத்தி, அதில் ஓர் ஊஞ்சல் கட்டி, அதில் குண்டு கல்யாணம், பிந்துகோஷ் இருவரையும் ஆட வைத்து... இப்படிக்கூட கற்பனைக் காட்சிகளை வடிவமைக்கலாம்.

'விஷுவல் கம்யூனிகேஷன் கோர்ஸ் தமிழகத்தில் பல கலைக் கல்லூரிகளில் தொடங்கப்பட்டிருக்கின்றன. மூன்று ஆண்டுப் படிப்பு இது. +2ல் எந்தக் குரூப் எடுத்துப் படித்திருந்தாலும், இந்தப் பாடப் பிரிவில் சேர்ந்து படிக்கலாம்.

தவிர, எலக்ட்ரானிக் கம்யூனிகேஷன் என்கிற ஊடகத்துறை தொடர்பான படிப்பும் தற்போது பரவலாகி வருகிறது.

மீடியா சார்ந்த இந்தப் படிப்புகளைப் படித்தவர்கள் பத்திரிகை நிருபர், புகைப்பட நிருபர், தொலைக்காட்சிச் செய்தி மற்றும் நிகழ்ச்சித் தயாரிப்பு, எடிட்டிங் போன்ற வேலைகளில் சிறப்பாகப் பணியாற்றலாம். மக்கள் தொடர்பு அலுவலர் பதவியின் மூலம் மக்களோடு இணைந்து பணிபுரிந்து அதே மக்களிடம் பேரும் புகழும் பெறலாம்.

விஷுவல் கம்யூனிகேஷன் கோர்ஸுக்கு தனியார்க் கல்லூரிகளில் ரூ.60,000 வரை கட்டணமாகப் பெறுகின்றனர். மாஸ்கம்யூனிகேஷன் படிப்புக்கு, அரசுக் கல்லூரிகள் பெறும் கட்டணம்: ரூ.15,000/-

எங்களது 'ஸாஃப்ட் வியூ' நிறுவனத்தில் தொடர்பியல் படிப்பில் ஒரு வருட டிப்ளோமா பயிற்சி கொடுக்கிறோம். அதற்கான கட்டணம் ரூ.90,000/- படிப்புக் காலத்தில் மாணவர்கள் தயாரிக்கும் குறும்படங்கள், ஆவணப் படங்கள் போன்றவற்றுக்கான செலவும் இதிலே அடங்கும்'' என்கிறார் ஆண்டோ பீட்டர்.

தினக்கூலி வேலை முதல் நாட்டை ஆளும் பதவி வரை எந்தப் பணி செய்வோரையும்விட, மீடியாவைச் சார்ந்தவர்கள் புதுப்புது மனிதர்களைச் சந்தித்தல், புதுப்புது திட்டங்களை உருவாக்குதல் என எப்போதும் இந்தத் துறையில் உள்ளார். புதுமை படைத்துக் கொண்டிருக்கின்றனர். நம் படைப்புத் திறன் மூலம் நம் எண்ணத்தைச் சமுதாயத்துக்கு விருந்தாக்கி, செல்வத்தையும், செல்வாக்கையும் தட்டிச் செல்லலாமே!

- தீபா

* ஆண்டோ பீட்டர்



# இதுதான் பாஸ்..!”

# குமார வயலூர் வளர் மனோகர முருகன்!

*ஏழ் தலம் புகழ் காவேரியால் விளை*
*சோழ மண்டல மீதே மனோகர*
*ராஜ கம்பீர நாடாளு நாயக*
*வயலூரா...*

என்று அருணகிரிநாதரின் திருப்புகழ் வரையும் தமிழ்ச் சித்திரத்தை மனத்தோற்றமாகக் கற்பித்துப் பாருங்கள்... கரைதொட்டு ஓடும் காவிரி; அதன் வளத்தால் செழித்து வளர்ந்து தரை தொட்டு கனத்திருக்கும் நெல் வயல்கள். மனோகரமான பசுமையின் மத்தியில் ராஜகம்பீரத்துடன் ஒரு குட்டி அரசனைப் போல் நிற்கும் சுப்பிரமணிய சுவாமி...

வயலூர் என்றழைக்கப்படும் குமார வயலூருக்கு நேரில் செல்கையில், இந்த சொற்சித்திரம் அப்படியே மெய்ச் சித்திரமாகத் திகழ்வதைப் பார்க்கிறோம். வளைந்து நெளிந்து செல்லும் உய்யகொண்டான் வாய்க்காலையொட்டிய சாலை, திருச்சியிலிருந்து வயலூருக்கு அழைத்துச் செல்கிறது. பாம்பைப் போல் வளைந்து நெளிந்து செல்வதால், அதற்கு சர்ப்பநதி என்றொரு பெயராம். சுப்ரமண்ய துதியாக ஆதிசங்கரர் இயற்றியுள்ள புஜங்கம், இதே சர்ப்ப நடையில் (சந்தம்) அமைந்திருப்பது நமக்கு ஞாபகம் வருகிறது! மயூராதி ரூடம் மஹாவாக்ய கூடம் மனோகாரி தேகம்... (மயில் வாகனனே, வேதோபநிஷத்துகள் முதலான மஹா வாக்கியங்களின் உறைவிடமானவனே, மனோகரமான - உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் - தோற்றம் உடையவனே) என்று சங்கரர் சுப்ரமண்ய புஜங்கத்தில் முருகனை வர்ணித்திருப்பார்!



✱ எட்டணா கொடுத்த வாரியார் சுவாமிகள்

அருணகிரியார் வர்ணித்த மனோகர சூழலில் ஆதிசங்ரர் வர்ணித்த மனோகர தோற்றத்துடன் நம் மனம், பார்வை, சிந்தை, அனைத்தையும் கொள்ளை கொண்டு விடுகிறான் வயலூர் முருகன். இவன் வள்ளி - தேவஸேனை ஸமேதன். ஒரு திருமுகம், நான்கு திருக்கரங்கள் சக்தாயுதத்துடன் வேலும் சேவற்கொடியும் ஏந்தியவன்.

தரிசனத்துக்குக் காத்திருக்கும் தாளமுடியாத கூட்டத்தில் நெறிபட்டுத் துன்புறுவதையும் மறந்து, பக்தர்கள் பரவசமாகிறார்கள் அவனைப் பார்க்கிறபோது! 'புன்னகை தன்னால் இன்னல்கள் தீர்ப்பான்; புன்மை இருள் கணம் மாய்ப்பான்' என்று அமரர் கல்கி தமது 'பொன் மயில் ஏறி வருவான்' என்ற பாடலில் பாடியிருப்பது மனத்தைத் தொட்டு ஓடுகிறது. 'கன்னலின் இனிய தண் தமிழ் அளிப்பான்' என்று தமிழ்க் கடவுளை அப்பாடலில் போற்றியிருப்பார் கல்கி. அருணகிரிநாதருக்கு அந்தத் தமிழ்வரத்தை அருணையில் அளித்த முருகன்; வயலூரில் அவ்வாற்றலை உணரச் செய்தான். அதனால்தான் அருணகிரியார் பிற தலத்து முருகனைப் பாடினாலும் 'வய

# வளம் தரும் கோயில் -13

**சீதா ரவி**

ஊரா' என்று விளித்துப் போற்றினார்! 'ஏழ் தலம் புகழ் காவேரி' என்ற வரிகள் இடம் பெறும் 'நாதவிந்து கலாதி' திருப்புகழ்கூட பழனி தலத்துக்குரிய திருப்புகழ்தான். அருணகிரிநாதர் பாடிய வயலூர் திருப்புகழ் பாக்களுள் பதினெட்டுப் பாடல்கள் மட்டுமே நமக்குக் கிடைத்து, புழக்கத்தில் இருக்கின்றன.

**வ**யலூர் முருகன் கோயில் ஒரு சிவாலயம்தான். வேட்டையாடிக் கொண்டிருந்த ஒரு சோழ மன்னன், தாகம் வாட்டியதால் மூன்று கிளைகள் கொண்ட கரும்பு ஒன்றைப் பறித்துச் சுவைக்க முற்பட்டிருக்கிறான். அந்தக் கரும்பிலிருந்து ரத்தம் பீறிட்டு வரவும், அதனடியில் தோண்டிப் பார்த்து, சுயம்புவான ஒரு சிவலிங்கத் திருமேனியை அகழ்ந்தெடுத்திருக்கிறார்கள். இந்தச் சிவலிங்கத் திருமேனியர்தான் இன்று வயலூரில் உறையும் ஆதிநாதர். அடியார்கள் முன் வைக்கும் பிரார்த்தனைகளையும் கோரிக்கைகளையும் மறக்காமல் நிறைவேற்றித் தருவதால், இவருக்கு மறப்பிலிநாதர் என்றும் பெயர்! ராஜராஜ சோழன் காலத்துக்கும் முற்பட்ட கல்வெட்டுகள் இவ்வாலய பராமரிப்புக்கு நிவந்தங்கள் எழுதி வைக்கப்பட்டதைச் சொல்கின்றன.



* ராஜகம்பீர நாடாளும் நாயகன்!

வயலூர் சுப்பிரமணிய சுவாமி கோவிலுக்குள் நுழைந்ததுமே மூலஸ்தான மூர்த்தியாகக் காட்சி தருபவர் இந்த ஆதிநாதர் என்கிற மறப்பிலிநாதர்தான். சற்றே பெரிய திருஉருவினராக கிழக்கு நோக்கிய சந்நிதியில் இருக்கிறார். அக்னீஸ்வரர் என்றும் இவருக்குப் பெயர் உண்டு.

அம்பாள் ஆதிநாயகி, முன்னிலை நாயகி என்கிற பெயர்களுடன் ஈசுவரன் சன்னிதியில் இருக்கிறாள். பெயர்தான் ஆதிநாயகியேயொழிய தோற்றத்தில்

நித்தியயௌவனாதான்! சின்னஞ்சிறு உருவமாக, இளம் மணப்பெண்ணின் அழகொளி வீச நிற்கிறாள். கீழ்க்கரங்கள் அபயமும் வரமும் அருள, மேல் இருக் கரங்கள் தாமரைகளை ஏந்தியிருக்கின் றன. திருச்சி வட்டாரத்துக் கோயில் களில் பலவற்றுள் அம்பாளின் மேல் கரங்கள் தாமரைகள் ஏந்தியே காட்சி கொடுக்கின்றன.

சுவாமி - அம்பாள் பிராகார வெளிச் சுற்றில் கோஷ்ட தெய்வங்கள் வழக் கப்படி அமைக்கப்பட்டிருக்கிறார்கள். தெற்கு முகமாக உள்ள தக்ஷிணாமூர்த்திக்கு அருகே பொய்யாப் பிள்ளையார் தனி சன்னிதி கொண்டிருக்கிறார். அருண கிரிநாதர் வாழ்க்கையில் இவருக்கு ஒரு முக்கியமான பங்கு இருந்தது. முருகன் அருணகிரியாரைத் தூக்கித் தண்ணீரில் போட்டார் என்று சொன்னால், நீந்தக் கற்றுக் கொடுத்தது இந்தப் பொய்யாப் பிள்ளையார்தான்!

* வயலூரில் உள்ள அரிய சதுர நடன ஆடலரசர் - அருகே சிவகாமி, மாணிக்கவாசகர்...



''அருணகிரி! என்னைக் குறித்துப் பாடு!'' என்று ஆணையிட்டுவிட்டு தமது வேல்முனையால் புலவரின் நாவில் எழுதிவிட்டுப் போய்விட்டார் முருகன். எப்படிப் பாடுவது என்று திகைத்து நின்றவருக்கு, உதவிக்கு வந்து வழிகாட்டி உரமூட்டி பாடல் பிறக் கச் செய்தவர் பொய்யாப் பிள்ளை யார்!

'கைத்தல நிறைகனி அப்பமோட வல் பொரி' என்ற திருப்புகழை இந்தப் பொய்யாப் பிள்ளையார் பேரில் தான் பாடியிருக்கிறார் அருணகிரிநாதர். அந்த நன்றியறிதலின் அடையாளமாக, பொய்யாப் பிள்ளையாரையொட்டியே சன்னிதி கொண்டிருக்கிறார் அருணகிரி நாதர்.

**'கை**த்தல நிறைகனி' என்கிறபோதே அப்பாடலுடன் தமது நிகழ்ச்சிகளைத் துவக்கிய கிருபானந்த வாரியார் சுவாமி களின் நினைவுதான் வரும். கூடவே, வயலூர் முருகனிடம் அவர் கொண்ட தனி அபிமானமும் இந்தத் தலத்தைப் பிரபலப் படுத்த அவர் எடுத்துக்கொண்ட முயற்சி களும் ஞாபகம் வரும்.

**"எட்டணாவைக் கொண்டு ராஜகோபுரம் கட்டிவிடுவாயா? என்று கேட்டான் முருகன்!"**

பல தலங்களுக்கும் சென்று திருப்புகழ் பஜனை செய்துவந்த திருமுருக கிருபா னந்த வாரியார் வயலூருக்கு வந்து தரிசனம் செய்தபோது தீபாராதனை தட்டில் எட் டணா நாணயத்தைப் போட்டாராம்! அன் றைக்கு (1930களில்) அதன் மதிப்பு மிக அதிகம்.

அன்றிரவு முருகப் பெருமான் கோவில் தர்மகர்த்தா தோட்டா ராதாகிருஷ்ண செட்டியாருடைய கனவில் தோன்றி, எட்டணாவைக் கொண்டு ராஜகோபுரம் கட்டி விடுவாயா?' என்று கேட்டிருக் கிறான்! அதிர்ந்துபோன அறங்காவலர், எட்டணாவின் சரித்திரத்தை விசாரிக்க முற்பட, ஜம்புநாத சிவாச்சார்யார் என்ற

அர்ச்சகர், அது வாரியார் சுவாமிகள் அளித்தது என்பதை நினைவு கூர்ந்து சொல்லியிருக்கிறார். உடனே பணத்தை (எட்டணாவைத்தான்!) வாரியாருக்கே திருப்பி அனுப்பியிருக்கிறார்கள்!

ஜம்புநாத சிவாச்சார்யார் அழகாக ராகம் போட்டு அர்ச்சனை செய்ததற்காகத் தாம் மகிழ்ந்தளித்த பணம் திரும்ப வரக் கண்டு அதிர்ச்சியும் கவலையும் கொண்ட வாரியார், அதற்கான காரணத்தை விசாரித்து அறிந்திருக்கிறார். ''ராஜகோபுரம்தானே...? கட்டி விடலாம்!'' என்று முடிவெடுத்து தாமே முன் நின்று திருப்பணிகளுக்குப் பொருள் ஈட்டி, அவை சிறப்பாக நடைபெறும்வரை உழைத்தும் இருக்கிறார்.

இவ்வாலயத்தின் பல்வேறு முன்னேற்றப் பணிகளிலும் வாரியாருக்குப் பங்கு உண்டு.

**வா**ரியாருடன் விளையாடிய வயலூர் அதிபதியைக் காணும் முன் நாம் செல்வ முத்துக்குமாரசாமியைக் கடந்துதான்போக வேண்டும். பொதுவாகவே இந்த உத்ஸவ மூர்த்தி தேவியருடன் நின்ற கோலத்தில்தான் காட்சி அளிப்பார். ஆனால், வயலூரில் தேவியர் நிற்க, முத்துகுமாரசுவாமி மயில் வாகனத்தின் மீது ஒரு கால் மடித்து, ஒரு காலைத் தோங்க விட்டபடி அமர்ந்து காணப்படுகிறார். மயிலும் வழக்கத்துக்கு மாறாக தெய்வானையை நோக்கியபடி நிற்கிறது.

இந்த முத்துக்குமார ஸ்வாமியை வணங்கிவிட்டுத்தான் சுப்ரமண்ய சுவாமி சன்னிதிக்கு வருகிறோம். சிவாலயங்களில் ஸோமாஸ்கந்த மூர்த்திக்கு உரிய ஸ்தானத்தில் காட்சி தருகிறார் வயலூர் சுப்ரமணிய சுவாமி.



* அருணகிரிநாதர்

சுப்ரமண்ய சுவாமி, தனது வேலால் நிலத்தில் கிரி அமைத்த சக்தி தீர்த்தம் கோயிலையொட்டி இருக்கிறது. இக் குளக்கரையில் அவன் தன் தேவியருடன் நின்று பார்வதி - பரமேசுவரர்களை ஆத்மார்த்தமாக வணங்கி தவம் செய்திருக்கிறான். அத் தவ - வலிமையால் 'வேண்டுவோர் வேண்டும் முன் வரமெல்லாம் தரும்' ஆற்றலையும் பெற்றிருக்கிறான்.

நாம் கேட்பதையெல்லாம் தர வல்லவன் இந்த முருகன் என்கிறார்கள். மணக்கோலத்தில் அவன் காட்சி தருவதால் இங்கே திருமணத் தடை பரிகாரங்களை ஏற்று அருள்புரிகிறான் என்கிறார்கள். எல்லாவற்றுக்கும் மேலாக, பெற்றோரைப் போற்றும் பண்பை இங்கே பறைசாற்றி நிற்கிறான் பாலசுப்ரமண்யன் என்றும் சொல்கிறார்கள்.

இவற்றுள் எந்தக் காரணத்துக்காகவும் அவனை வணங்கலாம். காணும்போதே கவலைகள் மறந்து மனம் நிறைகிறது என்கிற இனிய அனுபவத்துக்காக மட்டுமே வயலூர் சென்று வரலாம். பௌர்ணமி சந்திரன் போன்ற அவன் முகப் பொலிவும் இரு மின்னல் கொடிகள் போன்று பக்கத்திலிருக்கும் தேவியரின் ஒயிலழகும் கண்களையும் கருத்தையும் விட்டுக் கணமும் நீங்க மாட்டா!

*வருவாய் அருவாய் உளதாய் இலதாய்*
*மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்*
*கருவாய் உயிராய் கதியாய் விதியாய்*
*குருவாய் வருவாய் அருள்வாய் குகனே!*

# வேஷம்!

மதுரை முருகேசன்



திருச்செந்தூர் அருகே உள்ள குலசேகரன் பட்டிணம். தசரா பண்டிகை. அம்மனிடம் வேண்டியது நிறைவேறிய தருணத்தில் ஆண்களும், பெண்களும் விதவிதமாக வேடமிட்டுக் கொண்டு வீதிகளில் யாசகம் கேட்ட வண்ணம் சென்று கொண்டிருந்தனர்.

தர்மமகாராஜா, சேர - சோழ - பாண்டிய மன்னர்கள் மற்றும் அனுமன், நரிக்குறவர் வேடம் இப்படி நிறைய. பெண் வேடமிட்ட ஆண்கள், கொலுசு ஜல் ஜல் ஜல் என்று சப்திக்க நளினமான நடையில், முந்தானையை நேர் செய்வது போன்ற பெண்களின் அனிச்சை செயல்களைக்கூட தப்பாது செய்தனர்.

'இசக்கி'யும் உடம்பெல்லாம் நீலம்பூசி, கையில் வில்லோடு ராமபிரானாகவே மாறி இருந்தான். எதிர்பட்ட ஒரு பெரியவர், "இசக்கியா இது? எலே, ராமனே நடந்து வர்ற மாதிரி இருக்குலே! பீடி வாயும், சீட்டுக் கையுமா ஊரைச் சுத்தறப் பயலை, ராமனா பார்க்க சந்தோஷமா இருக்குலே! பூங்கொடி எப்படிலே இருக்கா? ஆமா, அம்மனுக்கு என்ன வேண்டிக்கிட்ட?"

"அண்ணாச்சி, பூங்கொடி சீக்காளியாவே ஆயிட்டா! மூச்சு வாங்கறா, இருமிக்கிட்டே இருக்கா! வீட்ல குழந்தைச் சத்தம் கேக்கணும். மூணு வருஷமா போராடி பார்த்துப்புட்டேன். அவ தங்கச்சி செவ்வந்தியை, நான் கட்டிக்க இப்பதேன் சம்மதிச்சா! நான் நினைச்சது இப்ப நடக்கப் போகுது. ராமர் வேஷங்கட்டி வேண்டுதலை நிறைவேத்தப் போறேன்."

"அட ராமா!" என்ற பெரியவர் அதிர்ச்சியில் சிலையானார்.

லலிதானந்த்

# காரணங்களில் மரித்தவன்!

ஒரு கோப்பை
உடைந்ததற்காக
யாரும் வருத்தப்படவில்லை

சுவரோவியத்தின்
நிற உதிர்தலை
யாருமே பொருட்படுத்தவில்லை

பலூன் வெடித்து அழும்
குழந்தைக்கு
யாருமே ஆறுதல் சொல்லவில்லை

அலைகளில் மிதக்கிற
ஒற்றைச் செருப்பை
யாருமே கவனிக்கவில்லை

மலர்க் காட்சி குறித்த
செய்தியை
யாருமே படிக்கவில்லை

நேசத்துக்குரியவர்கள் செல்லும்
ரயிலை வழியனுப்ப
யாருமே வரவில்லை

நான் இறந்து போனதற்கு
இத்தனை காரணங்கள்
போதாதா?



"நமது படைகளால் கைது செய்யப்பட்டுள்ள எதிரி நாட்டு மன்னனிடம் ஏதாவது கேட்க விரும்புகிறாயா? என்று கேட்டது தப்பாகப் போய்விட்டது அமைச்சரே."

"ஏன் மன்னா?"

"ஒண்டிக்கு ஒண்டி வர்றியானு கேட்டுட்டான்."

**- கே.ஆனந்தன், தர்மபுரி**

# ஒண்டிக்கு ஒண்டி

"எனக்கும் என் மாமியாருக்கும் சண்டை வந்தா, என் கணவர் மெல்லவும் முடியாம, விழுங்கவும் முடியாம தவிப்பார்."

"நல்ல டாக்டரா பார்த்துக் கூட்டிக்கிட்டுப் போக வேண்டியதுதானே?"

**- தா.ஆறுமுகம், வாணியம்பாடி**





"இத பாரப்பா! நான் முட்டாளுக்கு வழிவிடறதில்லை"

"பரவாயில்லை சார், நான் வழி விடறேன்."

**- ஆர்.தங்கராஜ், திருப்பூர்**



"இனி ஒரு பிறவின்னு இருந்தா நான்தான் உனக்கு மனைவியா இருக்கணும்..."

"ஏங்க அப்படிச் சொல்றீங்க?"

"அப்பவாவது நீ சமைச்சுப் போடுவல்ல..."

- நீ.முத்துக்குமார், திருச்சி

# வர்றியா?

"கண்டக்டருக்கும், டிரைவருக்கும் என்ன வித்தியாசம்?"

"தனித்தனியா டிக்கெட் குடுக்கிறவரு கண்டக்டர்! எல்லாருக்கும் மொத்தமா டிக்கெட் கொடுக்கிறவரு டிரைவர்!"

- எஸ்.ராஜேஸ்வரி, சேலம்





"எனக்கு எதுக்கு இத்தனை டெஸ்ட் பண்றீங்க டாக்டர்?"

"நிஜமாவே நீங்க பேஷண்ட்டா இல்லே போலியான்னு தெரிஞ்சுக்கத்தான்!"

- பம்மல் நாகராஜன், சென்னை - 75

# மலேயா

கிருஷ்ணா

கடை பூட்டியிருந்தது.

தீக்குச்சியை உரசியது போல எனக்குள் கோபம் மூண்டது.

'புதிய - பழைய கடிகாரங்கள் ரிப்பேர் செய்யப்படும்' என்ற அறிவிப்புப் பலகையைப் படித்ததும், கோபத்தின் வெப்பம் கூடியது.

இதைப் படித்து, ஏமாந்துதானே ரிப்பேரான அந்தப் பழைய கடிகாரத்தைச் சரி செய்ய, இந்தக் கடையில் கொடுத்தேன். கொடுத்து, கிட்டத்தட்ட ஒரு மாதமாகி விட்டது.

'வாங்க சார்' என்று வாய் நிறையப் புன்னகையும், மரியாதையுமாய் வரவேற்று, நாலே நாளில் சரி பண்ணித் தருவதாய் வாக்களித்து, கடிகாரத்தை வாங்கிக் கொண்டான் கடை முதலாளி.

என் அப்பாவின் கடிகாரம் அது. நாற்பது வருடங்களுக்கு முன்பு கடிகாரங்கள் இப்படிக் கூறு போட்டு விற்கும் அளவுக்குச் சீப்படவில்லை.

கடிகாரம் வாங்கி வந்த புதிதில், வீட்டுக்கு யார் வந்தாலும், 'மலேயா கடிகாரம்' என்று பெருமையோடு காண்பிக்கும் அப்பா, சிறுவர்களான எங்கள் கையில் படாதவாறு அலமாரியின் மேல் தட்டில் பத்திரமாக வைத்திருப்பார்.

நொடி முள் நகரும் போது, அட்டை ஒன்று சுழல, ஒரு பூ விரிவதைப் போல அழகாய்த் தெரியும்.

எங்களுக்கு வயது ஏற ஏற, கடிகாரத்தின் மேலுள்ள கவர்ச்சி மங்கிப் போனது. ஆனால், அப்பா இருந்த வரை கடிகாரத்தின் மதிப்பு குறையவேயில்லை.

அப்பா போன பிறகு, ஒரு நாள் சாவி கொடுக்கும்போது ஸ்பிரிங் உடைந்துவிட, தூக்கிப் பரணில் போட்டுவிட்டு மறந்தே போய்விட்டோம்.

சென்ற மாதம் வீட்டுக்கு வெள்ளை அடித்தபோது, 'பழையன கழிதல்' நடந்தது.

''அய், மாமனார் இங்கே ஒளிஞ்சுக்கிட்டு இருக்காரே'' என்று என் மனைவி இந்தக் கடிகாரத்தைக் காண்பித்தாள்!

கடிகாரத்தை என் கையில் வாங்கிக் கொண்டேன்.

'டைம் மெஷினில்' ஏறியது போல, என் சிறுவயது ஞாபகங்களும், அப்பாவின் நினைவுகளும் என்னுள்ளே ஓடின.

தூசி போகத் துடைத்து, ஹாலில் இருக்கும் 'ஷோகேசில்' வைத்தேன்.

''இது என்ன திருஷ்டி மாதிரி''என்றான் என் மகன். இந்தக் காலத்துக் குழந்தைகளே வயதுக்கு மீறித்தான் பேசுகின்றன.

அலுவலகம் போகும்போது, கடைத் தெருவில் இந்தக் கடை



# கடிகாரம்!

கண்ணில் பட்டது.

'புதிய - பழைய கடிகாரங்கள் ரிப்பேர் செய்யப்படும்' என்ற அறிவிப்புப் பலகையைப் பார்த்ததும், கடிகாரத்தை சரி பண்ணித் தர கொடுத்துவிட்டேன்.

''பழைய, ஹைதர் காலத்து கடிகாரம்தானே. எதுக்கு இப்படி அல்லாடுறீங்க?'' என்று என் மனைவி சொல்லிப் பார்த்தாள்.

ஆனால், நான் கேட்கவில்லை.

மனது விசித்திரமானது! பரணில் கிடந்தபோது வராத அப்பா ஞாபகம், திடீரென மடைதிறந்த வெள்ளமென கொப்பளித்துப் பெருகிப் பொங்கியது.

''என்ன மாப்ளே? புலம்பிக்கிட்டு தனியா, கடைத் தெருவிலே போறீங்க?''

குரல் கேட்டு நிமிர்ந்தேன். என் மனைவியின், பெரியம்மா மகன்! போலீஸ் கான்ஸ்டபிளாய் இருக்கிறார்.

என் சோகக் கதையைச் சொன்னேன்.

''எந்தக் கடை மாப்ளே?'' என்றார் மீசையை முறுக்கியபடியே.

''அதோ... பூட்டியிருக்கே...'' என்று நான் திரும்பி நின்று கடையைக் காண்பிக்கும்போதே, கடையைத் திறந்து கொண்டிருப்பது தெரிந்தது.

''வாங்க மாப்ளே, ரெண்டு தட்டு தட்டிடலாம் அவனை'' என்று அழைத்துச் சென்றார்.

''நான் ஏமாத்தணும்னு நினைக்கலே. வீட்டுல... பிரச்னை... உடம்பு சரியில்லாம...'' என்று கடை முதலாளி சொல்லும்போதே பொறுமை இழந்து கத்தினேன்.

''ஒரு மாசமாய் நாயா அலையறேன். நீ என்ன கதை சொல்றீயா?''

என் கோபத்தை சாந்தி செய்தார் கான்ஸ்டபிள் மச்சான்.

''சரி, கடிகாரத்தை எப்ப சரி செஞ்சு கொடுப்பீங்க?''

''நாலஞ்சு நாளுல...''

''கையிலே கட்டியிருக்கற கைக்கடிகாரத்தைக் கழட்டுங்க.''

அவர் கழற்றித் தந்தார். போலீஸ் பயம் அவர் கண்களில் தெரிந்தது.

''மாப்ளே, இதை வைச்சுக்குங்க. அவரு உங்க கடிகாரத்தை சரி பண்ணித் தந்திட்டு, இதை வாங்கிக்கட்டும்.''

இந்தக் கணக்கு எனக்குப் பிடிக்கவில்லை. என்றாலும், அப்பாவின்



## கிடைக்கவே கிடைக்காது என மறந்துபோன பொருளைக் கண்டதும் மனது முழுக்க அலைஅலையாய் மகிழ்ச்சி பரவியது!

கடிகாரம் வேண்டுமென்பதால் உடனே வாங்கிக்கொண்டேன்.

வாக்குக் கொடுத்தபடி அப்பாவின் கடிகாரத்தைத் திருப்பித் தரவில்லை அந்த ஆள். ஒரு வாரம் சென்று விசாரித்ததில், கடையைக் காலி பண்ணிக்கொண்டு போய் விட்டதாகச் சொன்னார்கள், பக்கத்துக் கடைக்காரர்கள்.

நம்பினவனை கழுத்தறுத்து விட்டதாய் சினம் கொண்டு, அந்த ஆளின் கைக் கடிகாரத்தை எடுத்து, கோபமாய்த் தரையில் வீசினேன்.

என்னால் முடிந்தது இதுதான்!

மூன்று மாதம் கழித்து, வாசலில் யாரோ அழைக்கவே, எட்டிப்பார்த்தேன்.



உடல் மெலிந்து, கறுத்துப் போன ஓர் ஆள் நின்று கொண்டிருந்தார். எங்கோ பார்த்த முகமாய்த் தெரிந்தது.

''வணக்கம் சார்'' என்றபடி தன் பைக்குள்ளிருந்து ஒரு பொருளை வெளியே எடுத்து நீட்டினான்.

குபீரென்று எனக்குள் சந்தோஷ ஊற்று. கிடைக்கவே கிடைக்காது என மறந்து போன பொருளைக் கண்டதும் மனது முழுக்க அலை அலையாய் மகிழ்ச்சி பரவியது.

சுதாரித்துக் கொண்டு, அவரை உள்ளே அழைத்தேன். இப்போது நினைவுக்கு வந்து விட்டது. இவர் கடிகாரம் ரிப்பேர் செய்யும் கடையின் முதலாளி ஆயிற்றே.

''ஏன் இளைச்சு, கறுத்துப் போய்... உடம்பு ஏதும் சுகமில்லையா?'' என்று கேட்டேன்.

சற்றுநேரம் மௌனமாய் இருந்தார்.

என் மகன் விளையாடும்போது மாடியிலேயிருந்து கீழே விழுந்ததுல, தலையிலே நல்ல அடி. ஒரு மாதமாய் ஆஸ்பத்திரியிலே கிடந்தான்... போயிட்டான். இந்த ஊரு சரிப்படாதுன்னு, நானும், மனைவியும் சொந்த ஊருக்கே திரும்பிட்டோம்'' என்றார்.

புரிந்துபோனது எனக்கு. நான் கடிகாரத்திற்காக அவரைத் தேடும்போது, அவர் மகன் பொருட்டு ஆஸ்பத்திரியில் இருந்திருக்கிறார்.

'ப்ச், என் பொருள்தான் முக்கியம் என அரக்கத்தனமாய் நடந்து கொண்டிருக்கிறேன். இதில், இவரது கைக்கடிகாரத்தை வேறு பிடுங்கிக் கொண்டு வந்து விட்டேன். ராக்ஷசன் நான்!

''இந்தப் பழைய கடிகாரத்துக்காக நீங்க அலைஞ்சதும் புரிஞ்சது, ஏதோ முக்கியமான ஞாபகமார்த்தமான பொருள்னு! மனசு கொஞ்சம் தேறி துக்கம் தணிய ஆரம்பிச்சதும், இதை எடுத்து சரி செஞ்சு, எடுத்துக்கிட்டு வந்தேன். நல்லா ஓடுதானு பாருங்க சார்'' என்றார்.

என்னால் பதில் கூற முடியவில்லை. குற்ற உணர்வில் குறுகிப் போனேன்.

''கோபத்துல, உங்க கைக் கடிகாரத்தை தூக்கிப் போட்டதுல... உடைஞ்சு போச்சு'' என்று மென்று விழுங்கினேன்.

''பரவாயில்லை சார்.. கடிகாரம் ரிப்பேர் பண்றவன்தானே நானு. எப்படி இருந்தாலும் கொடுங்க'' என்றார், சாதாரணமாய்.

மஞ்சள் பையில் அள்ளிப் போட்டு, பீரோவில் வைத்திருந்த கைக்கடிகாரத்தை எடுத்து வந்தேன்.

இப்போது அந்தக் கைக்கடிகாரம் யானை கனம் கனத்தது. ○

அருள்வாக்கு

# அத்தியாவசியத் தேவை

மனிதர்களுக்கு மானம், உயிர் இரண்டையும் காப்பாற்றிக் கொள்ள அத்தியாவசியமானவை எவையோ, அவை நாட்டில் உள்ள அத்தனை ஜனங்களுக்கும் கிடைக்க வேண்டும். இவற்றை சர்க்காரே சகலருக்கும் கிடைக்கச் செய்ய வேண்டும். அதற்குத்தான் திட்டம், ஒழுங்கு எல்லாம் வேண்டும்.

அப்படிப்பட்ட நிலை ஏற்பட வேண்டுமானால், வசதி உள்ளவர்கள்கூட பரம ஏழை எப்படி வசிக்கிறானோ அப்படி வசிக்கப் பிரயத்தனம் பண்ண வேண்டும். அவன் குடிசையில் இருந்தால் இவனும் குடிசையில் இருப்பது, அவன் கஞ்சி குடித்தால் இவனும் கஞ்சி குடிப்பது என்று, சௌகரியம் இருக்கிறவர்களும்கூடத் தங்களிடம் பணம் இருக்கிறது என்று, தேவைக்குமேல் அதிகமான வசதிகளையெல்லாம் பெருக்கிக் கொள்ளாமல் வாழ வேண்டும்.

வசதி இருக்கிறது என்று இவர்கள் பண்ணுகிற சுக ஜீவன காரியங்களெல்லாம் (luxuries) அபரிக்ரஹம் என்ற பெரிய தருமத்துக்கு விரோதம்தான். இந்தத் தோஷம் வந்துவிட்டால், ஈஸ்வரனின் அநுக்கிரஹம் கிடைக்கவே கிடைக்காது! மனுஷ்ய ஜன்மா பிரயோஜனம் உள்ளதாக ஆக வேண்டுமானால், நமக்கு ஜீவிப்பதற்கு அத்தியாவசியமாக எவ்வளவு தேவையோ அதற்கு மேல்

**நாம் ஜீவிப்பதற்கு அத்தியாவசியமாக எவ்வளவு தேவையோ, அதற்கு மேல் ஓர் இம்மிக் கூட விரும்பக் கூடாது!**

ஓர் இம்மிகூட விரும்பக் கூடாது. இதுவே அபரிக்ரஹம். வசதி இருக்கிறது என்றாலும் அதைக் கொண்டு கஷ்டப்படுகின்ற இதர குடும்பங்களுக்கு - அந்தக் குறைச்சலான வசதியைக்கூடப் பெற முடியாதவர்களுக்கு, உதவி செய்வதுதான் நியாயம் - தர்மம்- புண்ணியம். அதுதான் ஒருவனுக்கு மோக்ஷத்தை அளிக்கும்.



- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்



**ப**ரத்தை ஹீரோவாக வைத்து 'பழனி'யை இயக்குவதுதான் இயக்குனர் பேரரசுவின் அடுத்த டார்கெட். படம் பற்றி கேட்டால் பழனி பஞ்சாமிர்தம் போல ஸ்வீட்டாகப் பேசுகிறார்.

''அண்ணன் தங்கச்சி சென்டிமெண்ட் மாதிரி இது அக்கா தம்பி சென்டிமெண்ட். பரத் சின்ன வயதா இருக்கும்போதே அம்மா இறந்து போக, தன்னோட அக்காவான குஷ்புவை அம்மாவாக நினைச்சு பாசத்தைப் பொழியுறதுதான் கதை.''

''எல்லாம்வல்ல இறைவா
மனசுக்கு நிறைவா
எனக்கொரு வாழ்க்கை தந்துடடா''ன்னு

ஓபனிங் சாங்கோட பழனியில அட்டகாசமா ஆரம்பிக்குற கதை. கார் டிரைவரா, திருப்பாச்சி அருவாள நீட்டின மாதிரி, ஷார்ப்பான பையனா பரத். ரொம்ப ஃப்ரெஷ்ஷான பூ மாதிரி ஹீரோயின் காஜல் அகர்வால். ரெண்டு பேருக்கும் இடையில காதல், கலாட்டானு எகிறுது படம்.''

**ஓபனிங்கெல்லாம் ஓகே சார். ஆனா 'தர்மபுரி' ப்ளாப் கொடுத்த நீங்களும், 'கூடல் நகர்' சரியா போகாத சோகத்துல இருக்குற பரத்தும் ஒண்ணு கூடுறீங்களே எப்படி?**

''வெற்றி-தோல்வியை வைச்சு ஒரு கலைஞனை என்னைக்குமே எடைபோட கூடாது. இந்த ஸ்கிரிப்டைத் தயார் பண்ணிக்கிட்டிருக்கும்போதே என் மனசுல பட்டுனு தெரிஞ்சது பரத்தோட முகம்தான். அதுவும் 'காதல்' படத்துல அவர் நடிச்ச நடிப்பை பார்த்து அசந்து போய்ட்டேன்.

சொல்றதை உள்வாங்கி நடிக்கிற ஒரு சில இளம் ஹீரோக்களில் பரத்தும் ஒருவர். அவரோட நடிப்பிலேயும், என் திறமை மேலேயும் எனக்கு நம்பிக்கை இருக்கு. அதை 'பழனி' ரிலீஸுக்கு அப்புறம் நீங்களே புரிஞ்சுப்பீங்க.''

**இந்தப் படத்துல உள்ள மொத்த பாட்டையும் நீங்களே எழுதுறீங்களாமே... இது நியாயமா?**

''இதுவரைக்கும் பதினைஞ்சு படங்களுக்குப் பாட்டு எழுதுற வாய்ப்பு வந்தும் அதை மறுத்தவன் நான். என் பாடலையும் மக்கள் ரசிக்கறாங்க, என் சக இயக்குனர்களும் அதை விரும்புறாங்க. அதனாலதான் எழுதினேன். பழனியிலயும் ஒரு குத்துப் பாட்டு இருக்கு.

'திருவாரூர் தேரே பக்கம்

✱ போரா

# யதார்த்தம் ஈஸி...

இயக்கு

வாடி...

திருவிழா உனக்கு வெக்கவாடி... மாமல்ல புரத்து மன்னா வாடா செதுக்குன சிலையா நிக்கு நேண்டா'ன்னு பரத்தும் காஜலும் ஆடும்போது ச்சும்மா தியேட்டரே அதிரப்போகுது பாருங்க.''

**எல்லாப் படத்திலேயும் ரஜினிக்குக் கொடுக்கிற ஓபனிங் மாதிரி பாட்டு வெக்கிறீங்களே... எப்போ அவரை வெச்சு படம் பண்ணப் போறீங்க?**

''ரஜினி சாரை வெச்சு படம் பண்ணனும்னு யோசிக்கிறதே எனக்கு பெரிய சந்தோஷம். ஏன்னா என் வாழ்க்கையில அவரை வெச்சு ஒரு படம் பண்றதை ஒரு லட்சியமாவே வெச்சிருக்கேன். இயக்குனராவதற்கு எவ்வளவு கடுமையா முயற்சி பண்ணி உழைச்சேனோ, அதைவிட அதிகமா ரஜினியை வெச்சு படம் பண்ணவும் முயற்சி எடுத்து உழைப்பேன்.''

**யதார்த்தமான கதை, கமர்ஷியல் கதை இதுல எது ஈஸி, எது கஷ்டம்?**

''யதார்த்தமான கதை பண்றது தான் ஈஸி, கமர்ஷியலா படம் பண்றது ரொம்பவும் கஷ்டம். கமர்ஷியல் கதை தயார் பண்ண மூணு மாசம் எடுத்துக் இறேன்னா... யதார்த்தமான கதைக்கு ஒரு மாசமே போதும். அதுக்குக் காரணம் வாழ்க்கையில நடக்குற நிகழ்வுகளை அப்படியே ஸ்கிரீன்ல கொண்டு வந்துடலாம். ஆனா நடக்காத ஒரு விஷயத்தை நடக்குற மாதிரி காண்பிச்சு ரசிகனைக் குஷிபடுத்துறது இருக்கே.... அது பெரும் பாடுங்க. கமர்ஷியல் படத்துக்கு அதிக கவனம் வேணும். இல்லைன்னா கவுத்துடும்.

**உங்களுக்கும் விஜய்க்கும் சண்டையா?**

''அப்படி எதுவும் இல்லை. அடுத்த படம் அவருடன் பண்ண வேண்டியிருந்தது. ஆனால், அது முடியாமல் போய் விட்டது. அவர் 'அழகிய தமிழ்மகனி'ல் பிஸியாக இருந்தாலும் ஃபோன் மூலம் 'பழனி' படத்துக்கு வாழ்த்துத் தெரிவிச்சார். அடுத்து தரணியுடன் ஒரு படம் நடித்துவிட்டு வரும்போது, கண்டிப்பாக அவருக்கு நான் ரெடியாக வைத்திருக்கிற கதை காத்திருக்கிறது. அப்போது எங்கள் அதிரடி கூட்டணி மீண்டும் வலம் வரும்.''

- மனோ விக்டர்



★ காஜல் அகர்வால்






அன்பில்லா உலகம் வெறும் பாலைவனமேயாகும் என்று வேத சாஸ்திர புராணங்கள் கதறுகின்றன. கௌதம புத்தர் முதல் மகாத்மா காந்தி வரை உபதேசித்ததும், உபதேசிப் பதும் - அன்பேயாகும். ஆகையால், வேண்டுவது அன்பு. ஆனால், இரு தயப் பெட்டியில் வைத்துப் பூட்டப் பெற்றிருக்கும் அன்பினால் என்ன பயன்? ஒன்றுமில்லை. அது பூதங் காத்த புதையலைப் போலவே ஆகும். அன்பு பயன்பட வேண்டுமானால், அதை இருதயத்திலிருந்து வெளிக் கொணர வேண்டும். அவ்வாறு அன்பை வெளிக் கொணரக் கூடிய



# நோய் விசாரணையில்

சாதனங்களில், நோயில் வீழ்வதற்கு மிஞ் சித்தான் மற்றவையெல்லாம் என்று சொல்வேன்.

காலஞ்சென்ற வேதநாயக விற்பன்னர் தாம் இயற்றி அழியாப் புகழ்படைத்த 'பிரதாப முதலியார் சரித்திரத்தில், இந்த உண்மையை வெகு அழகாக எடுத்து விளக்கியிருக்கிறார். பிரதாப முதலியார் குழந்தையாக இருந்தபோது அவர் வீட் டில் யாருக்கோ நோய் வந்தது. அப்படி நோயாய்க் கிடந்தவரை எல்லாரும் சிரத்தையுடன் கவனித்தார்கள். அவ ருக்கு எல்லாப் பணிவிடைகளும் செய் தார்கள். போவோர் வருவோர் எல்லா ரும் நோயாளியைப் பற்றியே விசாரித் தார்கள். இவையெல்லாம் சிறுவனு டைய உள்ளத்தில் பொறாமைத் தீயை வளர்த்தன. 'எனக்கும் ஏன் நோய் வரக் கூடாது?, வந்தால் எல்லாரும் என்னைக் கவனிப்பார்கள் அல்லவா?' என்று ஏங்கிய தாக வேதநாயகர் விவரித்திருக்கிறார்.

மண்ணில் பிறந்து, மண்ணாகப் போகிற உங்களுடைய உடம்பை, பத்திர மாய்ப் பாதுகாப்பதில் எவ்வளவு பேருக்கு சிரத்தை உண்டென்று அறிய வேண்டுமானால், தயவுசெய்து நோயி

லேயே படுத்துக் கொள்ளுங்கள். எத்தனை பேர் வந்து உங்கள் தேகத்தைப் பற்றி விசாரிக்கிறார்கள்; எவ்வளவு கவலை காட்டுகிறார்கள்; எத்தனை விதமான சிகிச்சை முறைகளைச் சொல்கிறார்கள் என்பதைக் காண்பீர்கள்.

நோய் விசாரணையில் இரண்டு விதம் உண்டு: ஒன்று கர்நாடக முறை; மற்றொன்று நவீனமுறை. முதலில் கர்நாடக முறையைச் சொல்கிறேன்: நாராயணசாமி நோயாய்க் கிடக்கிறான். அவனைப் பார்க்க சேஷிப் பாட்டி வருகிறாள். ''அடா! என் கண்மணியே! இப்படி எலும்பும் தோலுமாய்ப் போய் விட்டாயே? வயிறு பகீர் என்கிறதே! கெடுத்து விடாதேடா, அப்பா! குட்டியம்மாள் வயிற்றில் நீயை வைக்காதேடா!'' என்று புலம்புகிறாள். அச்சமயம் நாராயணசாமியின் தாயார் குட்டியம்மாள் அங்கு வர, சேஷிப் பாட்டி அவளைப் பார்த்து, ''அடி அம்மா! குழந்தையை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கோடி. எங் காத்திலே 'கடன்காரன் பொன்னு' இருந்தானோல்யோ! இப்படியேதான் பத்துநாள் கிடந்தான். ஒருநாள் திடீரென்று வலிப்பு மாதிரி வந்து இரண்டு இழுப்பு இழுத்தது. பொக்குன்னு உயிர் போயிடுத்து. அப்புறம் அப்பான்னா வருமா? அய்யான்னா வருமா? ஜாக்கிரதேடி அம்மா! ஜாக்கிரதை!'' என்று கூறி, இறந்துபோன கடன்காரன் பொன்னுவை நினைத்து அழத் தொடங்குகிறாள்.

தற்போது 'பழையன கழிந்து புதியன புகுந்து' வருவதுபோல், நோய் விசாரணையிலும் பழைய கர்நாடக முறை மெல்ல மெல்ல மறைந்து நவீனமுறை தலையெடுத்து வருகிறது. இப்போதெல்லாம் படித்தவர்களும் நாகரிகமுற்றவர்களும் சாதாரணமாய் ஒருவரையொருவர் பார்க்கும்போது ''என்ன ஸார்! உங்கள் உடம்பு இப்போது ரொம்ப நன்றாயிருக்கிறதே!'' என்று சுகம் விசாரிப்பது வழக்கம். உடம்பு இளைத்துப் போயிருப்பதாகக் குறிப்பிடுவதே அநாகரிகம். நோயாளியாரையாவது பார்க்க நேர்ந்தால், அவரைச் சுகமாயிருப்பவராகவே பாவிக்க வேண்டும். அவருக்கு நோய் இருப்பதாக ஒப்புக் கொள்ளக்கூடாது. (நீங்கள் ஒப்புக் கொள்ளாவிட்டால் அவருக்கு நோய் இல்லாமற் போய் விடுமா? என்று கேட்காதீர்கள்; கேட்டால் நீங்கள் கர்நாடக மாவீர்கள்.) அவரே தமது வியாதியைப் பற்றிக் குறிப்பிட்டால்கூட, ''ரொம்ப நன்றாயிருக்கிறது. உங்களுக்கு ஒரு வியாதியும் இல்லை. எல்லாம் நீங்களாக நினைத்துக் கொள்வதுதான்'' என்று சொல்ல வேண்டும்.

– 'ஓ! மாம்பழமே!'
தொகுப்பிலிருந்து...
வானதி பதிப்பகம்



நாங்க ரிஜிஸ்தர் ஆபீசுல கல்யாணம் செஞ்சுக்கப் போறோம். நீங்க சாட்சி கையெழுத்துப் போடணும்.

# ''ஹலோ! நான்

முன்குறிப்பு: இந்த வாரம் காதல் நந்தவனத்தில் ஒரு நீதிக் கதையைச் சொல்லப் போறேன். வேற வழியில்லை. இதைத்தான் நீங்க படிச்சாகணும்.

''மதனராஜா உனக்கு போன். 'காதல் நந்தவனம்' பற்றிப் பேசணுமாம்.''

''சே! சே! இந்தப் பகுதியை ஆரம்பிச்சாலும் ஆரம்பிச்சோம் வாசகர்கள் எண்ணிக்கை கூடிக்கிட்டே போகுது. இதனால உதவி ஆசிரியர்களுக்கு எல்லாம் (ஆசிரியருக்கும்தான்) என் மேல பயங்கர பொறாமை.''

''ஓவரா பில்டப் பண்ணாதே. வீட்ல உட்கார்ந்துகிட்டு லெப்ட் ஹாண்ட்ல வேற வேற பெயர்ல நீ அனுப்பற லெட்டர் மேட்டர் எனக்கும் தெரியும்.''

''ஆகா! டெலிபோன் ஆபரேட்டர் வரைக்கும் கொளுத்திப் போட்டுட்டாங்களா? சரி, சரி... லைன் கொடுங்க. ஹலோ.''

''வணக்கம். மதனராஜன் சார்! நான் தான் காதலன் பேசறேன்...''

''யாரோட காதலன் ஸார்...? உங்க பேரு...?''

''சண்முகம். என் காதலி பேர் வள்ளி.''

''அடடா! ரொம்ப பொருத்தமா இருக்கே. வள்ளிக்கு முன்னாடி தெய்வானை யாரும் கிடையாதே?''

''சே! சே! பேருதான் சண்முகமே தவிர குணத்துல நான் ஸ்ரீராமன் சார். எங்க காதல் ரொம்ப புனிதமானது. ஆறு வருஷமா லவ் பண்றோம். இதுவரைக்கும் சுண்டுவிரல் கூடப் பட்டதில்லை.''

''நிஜமாவா?''

''சத்தியமா சார். நாங்க வெளியே போனாலும் ரெண்டு ஆட்டோவுல தனித் தனியாதான் போவோம். ஒருவேளை ஷேர் ஆட்டோவுல ஏறினா, நான் இந்த மூலை

யிலும் அவங்க அந்த மூலையிலும்தான் உட்கார்வோம்.''

''அடடே!''

''இன்னும் கேளுங்க. சினிமாவுக்குப் போனா மூணு டிக்கெட் எடுத்து நடுவுல காலியா விட்டுதான் உட்கார்ந்துப்போம்.''

''இந்தக் காலத்துல இப்படி ஒரு காதல் ஜோடியா? கேட்கவே என் மனசு சப் பாத்திக்குது... சீ! பூரிக்குது. என்ன விஷயமா எனக்குப் போன் செய்தீங்க?''

டான். இப்ப வெட்டுக்கத்தியோடு எங்களைத் தேடிட்டு இருக்கான் சார்.''

''சரிங்க சண்முகம். இ...இப்ப உங்களுக்கு எ...என்ன வேணும்?''

''உங்க உதவி வேணும் சார். காதலர்களுக்காக ஒரு பகுதியை ஆரம்பிச்சு, பெரிய சேவை செய்துட்டிருக்கீங்க. நாங்க ரிஜிஸ்தர் ஆபீஸ்ல கல்யாணம் செஞ்சுக்கப்

**மதனராஜன்**

# காதலன் பேசறேன்!''

''எங்க காதல் மேட்டர் அவங்க அண்ணனுக்குத் தெரிஞ்சு போச்சு சார். எங்களைப் பிரிக்க முயற்சி பண்றார்.''

''புனிதமான காதலர்களா இருக்கீங்க. உங்களைச் சேர்த்து வெச்சா என்னவாம்?''

''அதெல்லாம் அவனுக்குப் புரியாது சார். பயங்கரமான ரௌடி. போன ஆட்சியில நடந்த என்கௌண்டர்லயே பரலோகம் போயிருக்க வேண்டிய ஆளு. குறி தவறி பக்கத்துல இருந்தவன் போயிட்

போறோம். நீங்க சாட்சி கையெழுத்துப் போடணும்.''

''வி...விளையாடாதீங்க. நமக்குள்ளே முன்னே பின்னே பழக்கமே இல்லை. நான் எ...எப்படி சாட்சி கையெழுத்துப் போடறது?''

''அதுதான் இப்ப பேசி பழகிட்டோமே சார். மனுஷங்களோடு பழக ஒரு வருஷம் வேண்டாம் சார்... ஒரு நிமிஷம் போதும்...''

''டயலாக் எல்லாம் நல்லாதான் சார் இருக்கு. இதை சிவாஜி படத்துல ரஜினி பேசினா பாப்புலர் ஆகும். நமக்குள்ள பேசி என்ன சார் பண்றது?''

''நீங்க மறுக்கக் கூடாது. நாங்க இப்ப உங்க ஆபீஸுக்குத்தான் வந்துட்டு இருக்கோம். உங்களை பிக்கப் பண்ணிட்டு நேரா ரிஜிஸ்தர்






ஆபீஸுக்குப் போறோம். இப்ப நீங்கதான் எங்களுக்கு 'செந்தூரப் பூவே விஜயகாந்த்' மாதிரி.''

''ஐயையோ! அப்படின்னா நான் சால்வை போர்த்திட்டு ரெயில்வே டிராக்ல ஓடணுமா? ஹலோ... ஹலோ... பழனி... திருத்தணி... திருச்செந்தூர்... சீ! சண்முகா! கட் பண்ணிட்டாரே! நான் என்ன செய்யறது? சொக்கா! ஏற்கெனவே எனக்கு ஆபீஸ்ல ரொம்ப நல்ல பேரு, தேவையில்லாத விஷயத்துல மூக்கை நுழைச்சு வம்பை விலைக்கு வாங்கறேன்னு. ஓட வேண்டியதுதான். ஏம்பா, எடிட்டர் ரூம்ல இருக்காங்களா?''

''இருக்காங்களே! என்ன விஷயம்?''

''அங்கேயே சொல்லிக்கறேன்.''

''வணக்கம் மேடம்.''

''என்ன?''

''தலை சுத்துது; உடம்பு கொதிக்குது. சிக்குன் குன்யாவா இருக்குமோன்னு சந்தேகமாக இருக்கு. லீவு கொடுத்தீங்கன்னா, நான் கார்ப்பரேஷனுக்குப் போய் கொசு மருந்து அடிக்கச்...சீ! கவர்மெண்ட் ஆஸ்பத்திரிக்குப் போய் ட்ரீட்மெண்ட் எடுத்துப்பேன்.''

''நல்லாதானே இருந்தீங்க. என்ன திடீர்னு?''

''அப்பாயின்ட்மெண்ட் வாங்கிட்டு வர்றதுக்கு அது என்ன ரசிகனா?''

''சரி, சரி, போங்க!''

''நன்றி மேடம்.''

''ஒரு நிமிஷம்! அந்த சண்முகம் வந்து கேட்டா என்ன சொல்றது?''

''எ...எந்த சண்முகம்?''

''வள்ளியோட காதலன்.''

''இ... இந்த விஷயம் உ...உங்களுக்கு எப்படி...?''

''அட மண்டு! உங்ககிட்டே சண்முகம்னு சொல்லிக்கிட்டுப் பேசினது நம்ம ஸ்டாஃப்தான். கல்கியில எனக்கே எனக்குன்னு ஒரு பகுதி வேணும்னு அடம் பிடிச்சு வாங்கினீங்களே, இந்த மாதிரி பிரச்னை வந்தா, எப்படி சமாளிக்கறீங்கன்னு பார்க்க போட்ட டிராமாதான் இது.''

''நிஜமாவா?''

''ஆமா! நம்ம ஆள் குரலைக்கூட கண்டு பிடிக்க முடியலை. ஒரு போன் கால் வந்ததும் பேயறைஞ்ச மாதிரி ஓடறீங்க. பத்திரிகையில வேலை செய்யறவங்களுக்குத் தைரியம் வேணும். பிரச்னை தானே, வரட்டுமே பார்க்கலாம்னு கூலா சொல்லணும். எதிராளி பேசற தோரணையை வெச்சே இது உண்மையா பொய்யான்னு கண்டுபிடிக்கற திறன் இருக்கணும்.''

'ஹி...ஹி... எனக்கு அப்பவே இது நாடகம்னு தெரிஞ்சு போச்சு மேடம். சும்மா பயந்த மாதிரி நடிச்சேன். நான் போய் வேலையைப் பார்க்குறேன்.''

பின்குறிப்பு:

**இந்தக் கதையில் ஆசிரியர் பேசிய கடைசி பாராதான் நீதி என்று நீங்கள் நினைத்தால் அது தவறு. அதற்குப் பிறகு ரெண்டு வரியில் நான் சமாளித்துவிட்டு வந்தேனே, அதுதான் நீதி. அதாவது, குப்புற விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டியதைக் காட்டிக் கொள்ளாமல் சமாளிக்க வேண்டும்.**

●



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்




72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.
கிளை நிறுவனம் : புதிய எண். 16, பழைய எண். 19, முதல் மாடி, 30வது தெரு,
தில்லைகங்கா நகர், நங்கநல்லூர், சென்னை – 600 061. போன் : 22333214


## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 18 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/ வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்

# நடக்குமென்பார்;

மேஷம்: தனம், கல்வி, வாக்கு மேலோங்கும். புதிய வேலை தேடுபவர்களுக்கு நல்ல வேலை கிடைக்கும். வியாபாரத்தில் சற்று முற்போக்கான சூழ்நிலை உருவாகும். சனி/ராகு/கேது/குரு வழிபாடு செய்து வர நற்பலன் கைகூடும்.

ரிஷபம்: கல்வியில் முன்னேற்றம் கிட்டும். வீடு/மனை வாங்க உகந்த நேரம். சிலருக்குப் புதிய வேலைவாய்ப்பு கிடைக்கும். பணகஷ்டம் இருக்காது. தொழில் துறையில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். மனதைரியம் அதிகமாகும். ராகு/கேது வழிபாடு செய்து வர நன்மை பயக்கும்.

மிதுனம்: வெளிநாட்டு அழைப்பு கிட்டும். உடல் ஆரோக்கியம் மேலோங்கும். மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். வேலையில் இடமாற்றம் ஏற்படும். வழக்கு வெற்றி பெறும். குரு/சனி வழிபாடு செய்து வரவும்.

கடகம்: சுப காரிய பிரார்த்தனைகள் நிறைவேறும். உத்தியோகத்தில் வேலை பளு அதிகரிக்கும். யாருக்கும் ஜாமீன் போடாதீர்கள். புதிய மூலதனம் போட்டு தொழில் செய்வதை சற்றுத் தள்ளிப் போடவும், ராகு/கேது/சனி பகவானை வழிபட்டு வந்தால் நன்மை பயக்கும்.

சிம்மம்: வேலையில் திடீர் மாற்றம் ஏற்படும். மன குழப்பம் நீங்கும். பண வருவாய் பெருகும். வீடு மாற்றம் ஏற்படும். உடல் நிலையில் முன்னேற்றம் கிட்டும். தொழில் துறையில் சற்று பின்னடைவு ஏற்பட்டு பின்பு சரியாகும். ராகு/கேது/சனி/குரு வழிபாடு செய்து வர நற்பலன் கிட்டும்.

அடுத்த 'டூர்' எப்ப போலாம்னு பாத்துச் சொல்லுங்க சார்!

## பரத்வாஜ் பதில்கள்

**எ**ன் மகளுக்கு எப்போது திருமணம் நடக்கும்?

**- ருக்மணி வேணுகோபால், மும்பை**

உங்கள் பெண்ணுக்கு 2008-ல் திருமணம் நடக்கும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். படித்த, பண்புள்ள நல்ல வரன் அமையும்.

**எ**ன் பையன் திருமணம் செய்து கொள்ள இஷ்டமில்லாமல் இருக்கிறான். அவனுக்குத் திருமணப் பாக்கியம் உள்ளதா?

**- மீனாட்சி, போரூர்**

உங்கள் மகனுக்கு தற்போது ராகு தசை நடைபெற்று வருகிறது. ராகு பகவான் கேதுவின் சாரம் பெற்று இருப்பதால், திருமணம் பிடிப்பு இல்லாமல் இருக்கிறார். இவருக்கு 2008-ல் திருமணம் நடக்கும். நல்ல படித்துள்ள பெண் அமைவாள். உறவு கிடையாது.

# நடக்கும்!

01.07.07 முதல் 07.07.07 வரை



## தஞ்சை பரத்வாஜ்

வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். ராகு/கேது/குரு வழிபாடு செய்து வர நற்பயன் உண்டாகும்.

**தனுசு:** பொருளாதாரம் மேலோங்கும். உடல் ஆரோக்கியம் சீராகும். நீண்டதூர பயணம் செல்ல நேரிடும். பண கஷ்டம் விலகும். குரு/சனி வழிபாடு நற்பயனை அளிக்கும்.

**மகரம்:** எதிலும் கவனமுடன் செயல்பட்டால், எதிர்வரும் இன்னல்களிலிருந்து விடுபடலாம். வாகனங்களில் செல்லும்போது விபத்து ஏற்பட வாய்ப்புகள் உண்டு. யாருக்கும் ஜாமீன் போடாதீர்கள். ராகு/கேது/சனி வழிபாடு நற் பயனை அளிக்கும்.

**கும்பம்:** வேலை மாற்றம் ரெடி. வழக்கு, வியாபாரம் வெற்றி அளிக்கும். உத்தியோகத்தில் வேலை பளு அதிகரிக்கும். புதிய தொழில் முயற்சி கை கொடுக்கும். வியாபாரத்தில் சற்று முன்னேற்றம் ஏற்படும். ராகு/கேது/குரு வழிபாடு செய்து வருதல் நற்பயனை அளிக்கும்.

**மீனம்:** எண்ணங்கள் யாவும் ஈடேறும். சொத்துகள் சேரும். ஆடை, ஆபரண அலங்காரப் பொருட்கள் வாங்குவீர்கள். வெளிநாட்டு அழைப்பு வந்து சேரும். வீடு/மனை வாங்க உகந்த காலம். வழக்கு முடிவுக்கு வரும். வியாபாரத்தில் நல்ல லாபம் கிட்டும். ஆஞ்சநேயர் வழிபாடு செய்து வர நற்பலன் கிட்டும்.

**கன்னி:** மனச் சலனம் தீரும். வழக்கு வெற்றி அளிக்கும். தடை விலகி திருமணம் கைகூடும். சத்ரு தொல்லைகள் விலகும். வியாபாரத்தில் நல்ல அபிவிருத்தி ஏற்படும். குரு வழிபாடு செய்து வர நற்பலன் கிட்டும்.

**துலாம்:** கூட்டாளிகள் விட்டு பிரிய நேரிடும். தன உயர்வு ஏற்படும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். கூட்டுத் தொழில் செய்பவர்கள் உஷார். வேலையில் மாற்றம் கிட்டும். ராகு/கேது/ சனி வழிபாடு நற்பயனை அளிக்கும்.

**விருச்சிகம்:** சத்ரு தொல்லைகள் ஒழியும். எண்ணிய எண்ணங்கள் யாவும் ஈடேறும். வெளிநாட்டு அழைப்பு வந்து சேரும். வீடு மாற்றம், வேலை மாற்றம் ஏற்படும்.

இதுவரை ஆயிரம் பேருக்கு மேல் டேகேஸ் ஸ்டென்ட்டிஸ் முறையில் இந்த சிகிச்சை செய்திருக்கிறோம்!

# மணிக்கட்டின் வழியே இதய சிகிச்சை!

இதயத்தில் அடைப்பு இருந்தால் பைபாஸ் அறுவைச் சிகிச்சை, பத்து நாள் மருத்துவமனைப் படுக்கை, இரண்டு மாதம் ஓய்வு என்பதுதானே வழக்கமான வாடிக்கை.

இந்த அவஸ்தைக்கு 'டாடா' சொல்லும் முறை ஒன்றை, சென்னை 'மியாட்' மருத்துவமனை இப்போது அறிமுகப் படுத்தியிருக்கிறது! அந்த மருத்துவ மனையின் இதய நோய் சிகிச்சை நிபுணர் டாக்டர் ராஜேஷ் கண்ணா இது குறித்துப் பேசும்போது...

"இதயத்துக்கு ரத்தம் எடுத்துச் செல்லும் ரத்தக் குழாயில் இடப்புறம், வலப்புறம், முன்புறம் என மூன்று பாதைகளில் அடைப்பு ஏற்படும். அப்போது நெஞ்சில் வலி, மூச்சுத்திணறல் ஆகிய பிரச்னைகள் உண்டாகின்றன. இந்த நிலைமையை 'ஆஞ்சைனா' என்பார்கள். நீரிழிவு நோய் பாதிப்புக்கு உள்ளானவர்களுக்கும் இன்னும் சிலருக்கும், இவை போன்ற அறிகுறிகள் எதுவும் இல்லாமலேயே மாரடைப்பு உண்டாகலாம்.

அடைப்புகள் எங்கே ஏற்பட்டிருக்கின்றன என்று கண்டறியும் பரிசோதனையே ஆஞ்சியோகிராம். மேல் தொடையிலுள்ள ஃபெமொரல் ஆர்ட்டரி என்னும் ரத்த நாளத்தின் வழியே இது செய்யப்படுகிறது.



பதினொரு வருடங்கள் பயின்று, பயிற்சி பெற்றவர்.

''முன்பெல்லாம் மூன்று அடைப்புகள் இருந்தால் பைபாஸ் அறுவைச் சிகிச்சை செய்து கொள்வது தவிர வேறு வழியே இராது. இப்போது ஸ்டென்ட் மற்றும் பலூன் வழி சிகிச்சையில், கொழுப்பு, கால்சியம், மாசுப் பொருட்கள் எல்லாம் நீங்கி, அடைப்பே முழுமையாக நீங்கிவிடும். இதிலேயே மெடிகேட்டட் ஸ்டென்ட்டும் இருக்கிறது. இது அவ்வப்போது தேவையான மருந்தை வெளிப்படுத்தும். மறுபடியும் அடைப்பு வராமல் தடுக்கும். உலோகத்தினால் ஆன இந்த 'ஸ்டென்ட்'டை இதய நாள அடைப்பு உள்ள இடத்துக்கு கதீட்டர் மூலம் செலுத்தி, பலூன் மூலம் விரிவடையச் செய்யப்படுகிறது. ஸ்டென்ட் விரிந்தவுடன் அடைப்பு உள்ள பகுதியும் விரிவடைந்து மறுபடி ரத்தம் சீராகப் பாயத் தொடங்குகிறது. இதை 'ரேடியல் டே - கேஸ் ஸ்டென்ட்டிங்' என்கிறோம்!'' என்று சொல்லும் இவர்,

இதனால், அங்கே ரத்தக் கசிவு அல்லது ரத்தக்கட்டி ஏற்பட வாய்ப்பு இருக்கிறது. கால் வலியும், முதுகு வலியும் சிலருக்கு வர வாய்ப்பு இருக்கின்றன. இதனால் மணிக்கணக்காக ஓய்வு எடுக்க நேர்ந்தது. ஆஸ்த்துமா நோய் உள்ளவர்கள், மேலும் புதிய சிக்கல்களுக்கு ஆளாயினர்.

இதற்கெல்லாம் மாற்றாக, இப்போது புதிதாக மணிக்கட்டு வழியே, ரேடியல் ஆர்ட்டரி எனப்படும் சிறிய ரத்தக்குழாய் வழியாக ஆஞ்சியோ செய்தால் பலன்கள் கூடுதலாக இருக்கின்றன. ரத்தக் கட்டி உருவாக வாய்ப்பு இல்லை. ரத்தக் கசிவு தெரிந்தால் உடனே கைவைத்து அழுத்தினாலே போதும்; நின்றுவிடும். ஆஞ்சியோ முடிந்த உடனேயே எழுந்து நடக்கலாம்! இந்த சிகிச்சையை கை மணிக்கட்டு வழியாகச் செய்ய, பதினைந்தே நிமிடங்கள்தாம் ஆகின்றன!'' என்கிறார்.

பெங்களூரில் மருத்துவக் கல்வி படித்தவர் டாக்டர் ராஜேஷ் கண்ணா. ஆஸ்திரேலியா, இங்கிலாந்து, கனடா ஆகிய நாடுகளில் சுமார்

''பிறக்கும்போது பளபளவென்று மாசு மருவற்று இருக்கும் ரத்தக் குழாயில், பிறகு நம் வாழ்க்கை முறைக்கு ஏற்ப, நச்சுப் பொருட்களால் அடைப்பு ஏற்படுகிறது!

இந்தப் புதிய சிகிச்சை முறையில், சிகிச்சைக்கு மறுநாளே வேலைக்குச் செல்லலாம். நடைப்பயிற்சி செய்ய வேண்டும், உணவு முறையில் மாற்றம் வேண்டும். புகைபிடிப்பதைத் தவிர்க்க வேண்டும். இதுவரை டே கேஸ் ஸ்டென்ட்டிங் முறையில் ஆயிரம் பேருக்கு மேல் இந்த சிகிச்சையைச் செய்திருக்கிறோம். எல்லோருமே நன்றாக இருக்கிறார்கள். பைபாஸ் சிகிச்சைக்கு ஆகும் செலவுதான் இதற்கும் ஆகிறது. ஆனால், பலவிதமான தொல்லைகள் தவிர்க்கப்படுகின்றன!'' என்கிறார் டாக்டர் ராஜேஷ் கண்ணா.

* டாக்டர் ராஜேஷ் கண்ணா



– சாருகேசி

# தவறுகள்!

செய்த பாவங்களை உணர்ந்து உண்மையாக மன்னிப்புக் கேட்டால், திருமால் நம்மை வந்து ஆட்கொள்வார் என்பது வைணவ நம்பிக்கைகளில் முக்கியமானதொன்று. இதன் நவீன விபரீத விளைவுதான் திருப்பதி போன்ற கோயில்களுக்கு, லட்சலட்சமாகப் பணமும் தங்கமும் தினம் தினம் வந்து கொட்டுவது. பாவங்கள் செய்து விட்டு ஒருநடை திருப்பதிக்குச் சென்று விட்டு, உண்டியலில் கணிசமானத் தொகை போட்டுவிட்டு பாவங்களைச் செய்வதைத் தொடரலாம் என்று பலர் எண்ணுவது.

திருமங்கை ஆழ்வார் 'தாயே தந்தை என்றும்' எனத் துவங்கும் பத்து திருவேங்கடம் சார்ந்த பாசுரங்களில், உண்மையாகவே தன் வாழ்வில் செய்த பாவங்களைப் பட்டியலிட்டு, அவற்றுக்கு வருத்தப்பட்டு, என்றைக்கு இதை உணர்ந்தேனோ அன்றைக்கே உன்னை வந்தடைந்து விட்டேன். என்னை ஆட்கொள்வாய் என்று உருக்கமாக வேண்டுகிறார்.

திருமங்கை ஆழ்வார் திருநகரிக்குப் பக்கத்தில், சோழ மன்னனுக்குப் படைத் தலைவனாக இருந்த கள்ளர் மரபில் பிறந்தார். தினம் அடியார்களுக்குச் சோறு போட்டு, எல்லாம் இழந்து பெருமாளிடமே வழிப்பறி செய்ய முயன்று, ஞானோதயம் பெற்றவர் என்றெல்லாம் கதைகள் உள்ளன.

இந்தப் பத்து பாசுரங்களிலும் திரு மங்கை ஆழ்வார், தன் வாழ்வில் செய்த தவறுகளை வெளிப்படையாக ஒப்புக் கொள்கிறார். உதாரணமாக,

''கொன்றேன் பல் உயிரைக் குறிக்கோள் ஒன்று
இலாமையினால்
என்றேனும் இரந்தார்க்கு இனிது ஆக உரைத்து
அறியேன் -
குன்று ஏய் மேகம் அதிர் குளிர் மா மலை
வேங்கடவா! -
அன்றே வந்து அடைந்தேன்: அடியேனை
ஆட்கொண்டருளே.

(இரந்தார்க்கு - பிச்சை கேட்டவர்களுக்கு)

எந்தவிதக் காரணமும் இல்லாமல் பல உயிர்களைக் கொன்றேன். என்றைக்காவது பிச்சைக் கேட்டு வந்தவர்களுக்கு, ஓர் இனிய வார்த்தை உண்டா, அதுவும் இல்லை. குன்றில் மேகம் அதிரும் குளிர்ந்த திருமலை வேங்கடவனே! என் தவறை உணர்ந்த உடனே வந்துவிட்டேன். அடியேனை ஆட்கொள்வாய்.

அன்றாட வாழ்க்கையிலும் நம் தப்பை உணர்ந்து ஒப்புக் கொண்டால், மன்னிப்புக் கிடைக்கும் சாத்தியங்கள் அதிகம். உத்தமர்கள் சிலருக்கு திருவேங்கடவனைப் போல தாராள மனசு இருக்கலாம். மன்னித்து விடுவார்கள். முயற்சி செய்து பாருங்கள். குறைந்தபட்சம் உங்கள் குற்றங்களைப் பட்டியலிடுங்கள்.

தாய், தந்தை, மனைவி, மக்கள் என்றே அலைந்தேன். மான்கண் பெண்களிடம் மயங்கினேன். பல உயிர்களைக் கொன்றேன். தர்மம் செய்யவில்லை. திருமங்கையாழ்வாரின் பாவங்கள் ஏறத்தாழ இன்று பெரும்பாலானோர் செய்யும் பாவங்களே.

(படிக்கலாம்)



■ சுஜாதா

ஈடில்லா இறைவனுக்கு
இணையில்லா பொன்னுரு

Thejus

24 ct GOLD PLATED GIFTS

85,g n chetty road,t.nagar,chennai 600 017.
p.9840021384. www.thejus.com





**வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.**

*அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்*
*ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி* (Regd.)

**"ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகாஸ்தானம்"**

29-30, East Iyen Street, KUMBAKONAM, Thanjavur Dt. Tamil Nadu -612 001. India.
E-mail : vedagdps@sancharnet.in Website : www.rajapatasala.in

☎ Off : (0435) 2425948 2401789
Fax : 2425948
Patasala : 2401788 2422866

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பெருபகாரமாக இருக்கும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதையர்களான ஸ்ரீ நாகமய்யா ஸவேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 465 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 200 மாணவர்களுக்கு 17 வேத, சாஸ்திர அத்யாபகர்கள் புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், கிருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். புதிய பாடசாலை கட்டிடம் **ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகா ஸ்தானம்** என பெயரிடப்பட்டு 21-6-2004 திங்கள்கிழமை ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் திறந்து வைத்து வேத அபிவிருத்திக்கு அர்ப்பணித்தார்.

| தங்கள் நன்கொடைக்கு U/S 80-G பிரிவின்படி வருமான வரி விலக்கு உண்டு<br>நன்கொடை திட்ட விபரங்கள் | நன்கொடை தொகை | நிரந்தர வைப்பு நிதி "Corpus Fund" |
|---|---|---|
| ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி தொகை)<br>அமாவாஸ்யை (or) பௌர்ணமி (or) க்ருஷ்ண (or) சுக்ல பக்ஷ த்வாதசி | Rs. 500 | Rs. 8,000 |
| ஒரு ஸமாராதனைக்கு [Please choose one specific day of a particular month in a year for Samaradhana] | Rs. 1,500 | Rs. 25,000 |
| வேதம் பயிலும் ஒரு மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு ரூ.1000/- | Rs. 12,000 P.A | Rs. 2 Lakhs |

நன்கொடைக்கான தொகையை Cross செய்யப்பட்ட D.D./ Cheque-ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.

Mar-2007





# ஆம்பள உடம்புல பொம்பள மனசு!

'அரசி' சீரியலில் ராதிகா கேரக்டரைப் போல படு ஃபேமஸாகப் பேசப்படும் கேரக்டர் 'கங்கா'. 'அட... நம்ம 'பப்லு' பிரித்விராஜா இது? அசத்துராறே!' என்பது பல சீரியல்தரசிகளின் ஸ்டேட்மென்ட். அதே ஆச்சர்யத்துடன் அவரிடம் கேட்டால்... குதூகலமாகிறார்.

"இருநூறு படத்துக்கும்மேல நடிச்சிருக்கேங்க. ஆனா, இதுவரைக்கும் வாங்காத ஒரு பேரை இந்தக் கேரக்டர் வாங்கிக் கொடுத்திருக்கு. நானும் சமுத்திரக்கனியும் பல வருஷமா நல்ல நண்பர்கள். ஒரு நாள், "அரவாணி கேரக்டர் ஒண்ணு இருக்கு பண்றீங்களா"ன்னு தயங்கிட்டே கேட்டாரு. எனக்கும் அரவாணி கேரக்டர்ல நடிக்கணும்கிற ஆசை ரொம்ப நாளாவே இருந்தது. அவர் கேட்டதும் ட்ரிபிள் ஓகே சொல்லிட்டேன்.

ரொம்ப அருமையா நடிக்கிறீங்க. புடைவையில நீங்க ரொம்ப அழகா இருக்கீங்கன்னு நிறையப் பெண்கள் பாராட்டுறாங்க. ஆரம்பத்துல அரவாணிகள் சங்கத்திலேர்ந்து ஃபோன் பண்ணி, "எங்களை ரொம்பவே கேவலப்படுத்துறீங்க, நீங்க இந்தக் கேரக்டர்ல நடிக்கக் கூடாது"ன்னு மிரட்டினாங்க. ஆனா, இன்னைக்கு இந்தக் கேரக்டரோட தன்மையைப் புரிஞ்சுக்கிட்டு 'நம்ம பப்லு'ன்னு உரிமை கொண்டாடுறாங்க என்று சந்தோஷ வானில் மிதக்கிறார் பப்லு.

"ஷூட்டிங் ஆரம்பிக்குறதுக்கு மூணு மாசத்துக்கு முன்னால, பார்க்குற அரவாணிகள் எல்லாரையும் கூப்பிட்டு வெச்சு அன்பா பேசிப் பழகினேன். நம்ம ஊர்ல மட்டுமில்ல, ஹைதராபாத், மும்பைன்னு போற இடத்திலெல்லாம் அப்படிச் செஞ்சேன். அப்படி எடுத்துக்கிட்ட பயிற்சிதான் இந்த அளவுக்கு என்னை நடிக்க வெச்சிருக்கு.

அரவாணிகளைப் பற்றி ஒரு வார்த்தையில சொல்லணும்னா 'ஆம்பள உடம்புல பொம்பள மனசு'ன்னு சொல்லலாம். சராசரி மனுஷங்களைக் காட்டிலும் அவுங்களுக்கு வீரம் அதிகம். ஆனா அவுங்கள இதுவரைக்கும் மீடியா ரொம்ப கோழையாதான் காண்பிச்சுக்கிட்டிருக்கு. இந்தக் கேரக்டர்ல நடிச்சதுக்கு அப்புறம்தான் பெண்கள் மேலேயும், அரவாணிகள் மேலேயும் தெய்வீகமான மரியாதை இன்னும் ஒருபடி கூடியிருக்கு. இதுக்குப் பிரதிபலனா கண்டிப்பா அரவாணிகளுக்கு, என்னால முடிஞ்ச உதவிகளைச் செய்யணும்ங்கிற முயற்சியில இருக்கேன்" என்று நெகிழ்கிறார்.

தொடர்ந்து ஏன் சினிமாவுல நடிக்கல, வாய்ப்பு கிடைக்கலையா? என்றால் சிரித்துக்

கொண்டே மறுக்கிறார்.

''தமிழ்ல பதிமூணு படத்துல நடிக்க வாய்ப்பு வந்தது. ஆனா தெலுங்கில நான் பிஸியா இருந்ததால தான் நடிக்க முடியாம போச்சு. நான் ஃப்ரீயா இருக்கும் போது தமிழ்ப்பட வாய்ப்பு அமையல. அது என்னோட நேரம்னு நெனைக்கிறேன்.

எனக்கு ஏதாவது குறிக்கோள்

**மனம் நெகிழும் பப்லு!**

இருக்கான்னு கேட்டீங்கன்னா... அப்படி எதுவும் இல்லைன்னுதான் சொல்வேன். இன்னைக்கு என்ன நடக்கும்; நாளைக்கு என்ன நடக்கும்னு நாம தீர்மானிக்கிறதில்ல. நம்பளையும் மீறின ஒரு சக்தி இருக்கு. எம்.ஜி.ஆர் காலத்திலிருந்து குழந்தை நட்சத்திரமா நடிச்சிக்கிட்டிருக்கேன். அப்போதெல்லாம் வாங்காத பேரை 'கங்கா' கேரக்டர்ல நடிக்கிறது மூலமா அனுபவிக்கிறேன். நாளைக்கு இதைவிட எப்படி இருப்பேன்னு சொல்ல முடியாது நம்பள மீறின அந்தச் சக்திக்குதான் தெரியும்'' என்று தத்துவார்த்தமாகப் பேசுகிறார். இதுவும் சேர்ந்துதான் பப்லுவோ!

- மனோ விக்டர்

26

குளித்த ஈரத்தில் அடித்த விபூதி, பொழுதுபோல் மெல்லப் புலர்ந்தது. அம்மா அதிசயமாகப் பார்த்தாள். வாய்விட்டு முருகா என்று சொல்லிக்கொண்டு அவன் கண்மூடி விபூதி பூசியதில்லை. அவசரத்தில் ஒரு கோடு இழுத்துக் கொண்டே காலில் செருப்பை மாட்டிக் கொள்ளும் வேகம்தான் அங்கே தினசரிக் காட்சி. உழைப்பே கடவுள். வியர்வையே விபூதி. ஒரு பதவி கிடைத்துவிட்ட பிறகு, பளிச்சென்று வெள்ளைச் சட்டை அணிந்து விபூதி துலங்க, தன் மகன் கால் மேல் கால் போட்டு அமர்ந்து பத்திரிகையாளர் களுக்குப் பேட்டி கொடுக்கும் காட்சி யொன்றை முத்துராமனின் அம்மா அவ் வப்போது கனவுபோல் தரிசிப்பது வழக்கம். சுகமாகத்தான் இருக்கும்.

ஸ்டூலின்மீது ஆறிக்கொண்டிருந்த காப்பியை வாயில் ஊற்றிக் கொண்ட படிக்கு முத்துராமன் வெளியே வந்தான்.

''நான் போயிட்டு வந்துடறம்மா. நோட்டீஸ் கட்டு வந்துருச்சி. உள்ளார வெச்சிருக்கேன். தம்பிய பேர் எளுதி வெச்சிர சொல்லு. லிஸ்டு தனியா பக் கத்துல வெச்சிருக்கேன்.''

''ரொம்ப தொலவு போறியான்னா?''

''பக்கம்தான்'' என்று ஒரு மாறு தலுக்கு தம்பியின் சைக்கிளில் புறப்பட் டான்.

பொதுவாக பைக்கில் போகும் போதெல்லாம் ஓர் எம்.எல்.ஏ.வாக ஏனோ உணரத் தோன்றுகிறது. பைக்கை விற்று விட்டுப் பணத்தில் வீட்டுக்கு நல்ல தரை போடலாம். எஞ்சிய பணத்தில் இன்னொரு சைக்கிள் வாங்க லாம். சைக்கிள் நல்லது. தேக ஆரோக்கி யத்துக்கு உகந்தது. தவிரவும் மேடுகளில் அழுத்தி மிதித்து முன்னேறும்போதெல் லாம், இருக்கிற வாழ்க்கையை நினைவு படுத்திக்கொண்டு இருக்கக் கூடியது.

''இன்னாடா இது பைக்க எடுத்துக்கிட்டு போவல?''

ஒருகணம் தாமதித்தான். ''போரடிக் குதும்மா. இனிமே தம்பி ஓட்டட்டும். எனக்கு இது போதும்.''

சட்டென்று வந்துவிட்ட சொல்லை நினைத்துச் சிரித்துக் கொண்டான். அவனுக்கு மட்டும் ஆசை இருக்காதா என்ன? கொஞ்சநாள் ஓட்டட்டும். அப்புறம் விற்றுவிட்டு வீட்டுக்குத் தரை போடலாம்.

ஏறி மிதித்ததில் சைக்கிள் அவனை யறியாமல் எழும்பூருக்குத்தான் போனது. மூச்சிறைத்தது. முத்துக்களாக வியர்வை. நெற்றியில் அடித்த விபூதியை சட்டைக் கையால் துடைக்க வேண்டியதானது. எம்.எல்.ஏ.வின் வெள்ளைக் கைக்குட்டையை அவன் அடிக்கடி ரசிப்பது உண்டு. எடுத்து ஒற்றிக் கொள்ளும் லாகவம் அந்தஸ்து டன் இலவச இணைப்பாக வந்திருக்கும் என்று நினைத்துக்கொள்வான். சந்தேக மில்லை. அது ஒரு திறமைதான். கைக் குட்டையில் லாகவமாகத் துடைத்துக் கொள்வதல்ல. அரசியலில் நீந்திக் கரை சேர்வது.

வருத்தம் ஒன்றுமில்லை. ஆனால், ஓர் ஏமாற்றம் இருந்தது. தன் விஷ யத்தில் இத்தனை மெனக்கெடுவது என்றால் அரசியல் சதுரங்கத்தின் சக்கர வர்த்திகள் மோதிக்கொள்ளும்போது எத் தனை திறமையும் தேர்ச்சியும் அவசி யம்?

அவனுக்கு வியப்பாக இருந்ததெல் லாம் ஒன்றுதான். சிங்காரவேலு கொளுத்திப்போட்ட சந்தேகப் பொறி பற்றிக்கொண்டு தீயானபோதுகூட, சாந்தி வீட்டில் அவனால் வெறுமனே ஊதி அணைத்துவிட முடிந்தது. என் தரப்பு இதுதாங்க. ஒரு கல்யாணத்த நிறுத்த பெருசா மெனக்கெட வேணாம். நீங்க சொல்லுற ஒரு கார ணம் போதும். இன்னொரு பொண்ண

பா.ராகவன்

பாக்கத்தான் பாளையங்கோட்டைக்குப் போனதா அவுங்க சொல்லியிருக்காங்க. நல்லவேளை அங்க ஒரு சின்னவூடு வெச்சிக்கினு இருக்கேன்னு சொல்லல. அந்த வரைக்கும் சந்தோசம்தாங்க. பத்திரிகை அடிக்க குடுத்திருக்குது. இப் பவே போய் நிறுத்திர சொல்லிடுறேன். தீவிர அரசியலும் கல்யாணமும் ஒரே டயத்துல நம்ம லைஃபுக் குள்ளாற நுழைஞ்சிது. ரெண்டும் ஒரே டயத்துல இப்பம் போயிட்டு வாடா



வெண்ணைங்குதுங்க. சர்தான்னு போயிருவேன். ஒண்ணும் கஸ்டம் இல்லிங்க. என்னா ஒண்ணு, தோத்துப்போயி திரும்பினாலும் கெட்ட பேரோட திரும்பிடக்கூடாதுன்னுதான் பாக்குறேன். கண்டிப்பா . வர வெள்ளிக்கிழமை திரும்ப பாளையங்கோட்டைக்குப் போவத்தான் போறேன். முன்னமே சொன்னமாதிரி கட்சி மாநாடுங்க. தந்தி பேப்பர்ல பாத்திருப்பீங்களே? அதான். மாநாட்டு மேடைல இருவத்தஞ்சி இலவச திருமணம் செஞ்சி வெக்கறாங்க. கவலப்படாதிங்க. அதுல கூட நான் கிடையாது. நம்ம ராசி எப்பவும் கீழ குந்திக்கினு விசிலு வுடறதுதான். வரட்டுங்களா?''

பல நிமிடங்கள் பேசாதிருந்துவிட்டு, சாந்தியின் அப்பா எழுந்துவந்து கைகளைப் பிடித்துக்கொண்டார். ''மன்னிச்சிருங்க மாப்ள. நான் பொண்ண பெத்தவன்.''

''அட நீங்க வேறங்க. வடபளனி பக்கம் போனா ஒன் அவருக்கு இத்தினி ரூவான்னு வாடகைக்குக் கைக்குழந்தையே கிடைக்கும். வாங்கிட்டு வந்து நான் பெத்ததுன்னுகூட சொல்லியிருப்பானுக. ஐயா, நம்பிக்கை வேணுங்க. நான் ஒலக உத்தமன்னு சொல்லிக்கல. அதே சமயம் கண்டிப்பா கேவலமானவன் இல்லிங்க. நீங்க நம்பறதுக்காக இத சொல்லல. எனக்கே ஒருக்கா சொல்லிக்க வேண்டியிருக்குதுங்க'' என்று சாந்தியைப் பார்த்தான். புன்னகையற்ற அதே சாந்தி. அதே பார்வை. தன் விருப்பம் என்று ஒன்று இவளுக்கு இருக்கிறதா? என்று அப்போதும் அவன் நினைத்தான். எப்போதும் அது அவளுக்கு இருந்ததில்லை என்றே தோன்றியது.

''மறந்துடுங்க மாப்ள. நாங்க பேசுனது தப்பு. உங்கள நான் நம்புறேன். கல்யாணம் நல்லபடியா நடக்கட்டும்'' என்று சொன்னார் சாந்தியின் அப்பா.''

''நல்லதுங்க. ஆனா நான் மாநாட்டுக்குப் போவுறது உறுதிங்க. அதுல எந்த மாறுதலும் இல்ல. சொன்னபடி போயிட்டு வந்ததும்தான் கல்யாணம்'' என்று சொல்லிவிட்டு வெளியேறினான்.

பைக்கின் ஸ்டாண்டைத் தள்ளிய கணத்தில் உள்ளுக்குள்ளிருந்து 'ஒரு நிமிசம்' என்று குரல் கேட்டது. சாந்திதான். முத்துராமன் சற்று ஆச்சர்யப்பட்டுத் திரும்பினான். அவள் வெளியே வந்தாள்.

''நீங்க எம்.எல்.ஏ. ஆயிட்டிங்கன்னா இந்த மாதிரியெல்லாம் பிரச்னை வராதில்ல?''

ரகசியமாகச் சிரிக்கிறாளா என்ன? இந்தச் சந்தர்ப்பத்தில் இப்படியெல்லாம் நகைச்சுவை உணர்வுடன் பேசுவதற்கு மிகப்பெரிய நெஞ்சழுத்தம் வேண்டும்.

முத்துராமன் சிரித்தான். ''இப்பவும் சொல்லுறேன் சாந்தி. எம்.எல்.ஏ. ஆவுறது பெரிய விஷயமில்ல. அரசியல்வாதி ஆவுறதுதான் கஸ்டம். அது முடியுமான்னுதான் தெரியல.''

போய்விட்டான். எப்படியும் அவளுக்கு புரிந்தி

''மாறுவேடத்தில் சென்று எதிரியின் படைக்கலன்களைப் பார்த்து வந்தீர்களே... தங்களுக்கு என்ன தோன்றுகிறது மன்னா...?''

''அவனிடம் சரணடைந்துவிடவாம் என்று தோன்றுகிறது அமைச்சரே...''

- கே.ஆனந்தன்,
தர்மபுரி



கண்டிப்பா நான் ஒரு நாள் எம்.எல்.ஏ. ஆவேன். ஊருக்கு நல்லது செய்வேன். ஆனா, இவனுக பண்ற அரசியல நான் செய்யமாட்டேன்!



ருக்காது என்று தோன்றியது. அவசியமும் இல்லை.

ஆல்பர்ட் தியேட்டர் வாசலில் சைக்கிளை ஸ்டாண்ட் போட்டு நிறுத்திவிட்டுக் காத்திருந்தான். சாந்தியை முதன் முதலில் தனியே சந்தித்த அதே இடம். அங்குதான் வரச்சொல்லி இருந்தான். நாலு வார்த்தை பேசுவதற்குள் அவளது குடிசை அப்போது பற்றிக் கொண்டுவிட்டது. அர்த்தமில்லாமல் பதற்றப்பட்டு, உடனே ஓடி, கருகி அணைந்த குப்பத்தின் வீதியில் ஒரு மணி நேரம் நின்று, ஆறுதல் சொல்லி...

பொதுவில் குடிசைகளும் குடிசை வாசிகளும் அதிர்ச்சிகளில் அதிக நேரம் செலவிடுவதில்லை. ஒப்பாரி முடிந்ததும் பைசல். அவலம் வாழ்க்கையாகி விட்ட பிறகு அதிர்ச்சி மதிப்புகள் ஒரு பொருட்டில்லை. சூட்சுமங்களும் சூழ்ச்சிகளும் அரசியல்வாதிகளுக்குத்தான். விளைவுகள் மட்டுமே அடித்தட்டை பாதிக்கின்றன. பாதிப்பு என்பது பெரிய சொல், தொடுகின்றன. அவ்வளவுதான். துடைத்துப் போட்டுவிட்டு எழுந்துபோகத் தெரிந்தவனுக்குக் காக்கை எச்சம் ஒரு பொருட்டு இல்லை.

சாந்தி வந்தபோது கையில் மாலை தினசரி ஒன்றை வைத்திருந்ததை அவன் கண்டான். புன்னகை செய்தான்.

''உங்க கட்சி பேப்பருதான். உங்கள கட்டிக்கப்போறனில்ல? சரி, பேப்பராச்சும் படிக்கலாம்னு வாங்கினேன். சந்தோசமா?''

மீண்டும் சிரித்தான். அதைப் பிடுங்கித் தூரப் போட்டான்.

''ஐயோ, இன்னா இது?''

''வேணாம் சாந்தி. பேப்பர் படிச்சி ஒண்ணும் தெரிஞ்சிக்க முடியாது. பேப்பர்ல அரசியல் எதும் வராது. அறிக்கைங்கதான் வரும்.''

''உங்க தலைவரோட சித்தப்பா புள்ள எம்.பி. ஆயிட்டாராமே?''

அவனுக்குச் சங்கடமாக இருந்தது. தனக்காக அரசியலில் நாலு வார்த்தை பேச விரும்புகிற பெண். இதுவும் வலிந்து வரவழைத்துக் கொண்டதாகத்தான் இருக்கும். ஐயோ பாவம் என்று தோன்றியது. வேறு ஏதாவது பேசலாம் என்று நினைத்தான். ''சேலை எப்ப எடுக்கப் போறிங்க'' என்று கேட்டான்.

''அதெல்லாம் அம்மா பாத்துக்கும். நீங்க எதுக்கு வரச் சொன்னிங்க? அதச் சொல்லுங்க மொதல்ல.''

''சும்மாதான். நாளைக்குப் பாளையங்கோட்டை போறனில்ல? வர மூணு நாளாவும். அதான் பாத்துட்டுப் போலாம்னிட்டு...''

''போன செவ்வாக்கெழம வண்டில காத்தில்லாம வந்திங்களே.''

''இப்பம் பாக்கணும்னு தோணிச்சி. காத்தடிச்ச சைக்கிள்ல வந்திருக்கேன். கூட வரியா?''

''சைக்கிள்லயா? என்று சட்டென்று சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, பின்னால் ஏறப்போனவளைத் தடுத்து, முன்பக்கம் பாரில் ஏறிக்கொள்ளச் சொன்னான். வெட்கப்பட்டாள். ஏறிக்கொண்டாள்.

''எங்க போறோம்?''

''சும்மா ரெண்டு ரவுண்டு சுத்திட்டு வூட்டாண்ட கொண்டு விட்டுடுறேன்.''

''மாநாட்டு வேலைங்க இல்லையா?''

முத்துராமன் வாய்விட்டுச் சிரித்தான்.



''ஊர்வலத்துக்கு இந்த அளவு கூட்டம் சேர்க்க தலைவர் என்ன யுக்தியை மேற்கொண்டார்?''

''ஊர்வலம் டாஸ்மாக் கடையில் முடிவு பெறும் என்று அறிவித்து விட்டார்!''

- நாஞ்சில் சு.நாகராஜன்

தொண்டனுக்கு வேலை விசிலுவுடறது தான் சாந்தி. அது வேலகூட இல்ல. ஒரு சந்தோசம். செலபேருக்கு பீடி சிகரெட்டு. செலபேருக்குத் தண்ணி. எனக்கும் எங்கப்பாருக்கும் அரசியல்.''

''ஏமாத்திட்டாங்களாங்க?'' சட்டென்று கேட்டாள். முத்துராமன் அமைதியாக மிதித்தான். ஏமாற்றம் தான். சந்தேகமில்லை. அந்த வேதனையைக் காட்டிலும் சாந்தி வீட்டைக் குறி வைத்து ஒரு சூழ்ச்சி வலை பின்னப்பட்டது மிகவும் வலித்தது. ஆனால், எளியவர்களால் சுலபமாக வலைக்குள்ளிருந்து மீண்டுவிட முடிகிறது. எல்லாம் இயல்பு. எல்லாமே கடந்து போகிறவை.

''ரொம்ப கஸ்டமா இருக்குதுங்களா?''

''இல்ல சாந்தி. தெளிஞ்சிட்டேன்.''

''என்னான்னு?''

''கண்டிப்பா நா சொன்ன மாதிரி ஒருநாள் எம்.எல்.ஏ.ஆவேன். ஊருக்கு நல்லது செய்வேன். எப்பன்னு கேக்காத. தெரியாது. ஆனா, இவனுக பண்ற அரசியல கண்டிப்பா நாஞ்செய்ய மாட்டேன்.''

''அன்னிக்கி நீங்க முழுவெவரம் சொன்னப்ப பாதி புரிஞ்சிது. மிச்சத்த நைட்டு தூங்கச் சொல்ல யோசிச்சிப் புரிஞ்சிக்கிட்டேன். இன்னாத்துக்கு இப்படி ஓர் அப்பாவிய போட்டு பந்தாடணும்? மாறவே மாட்டாங்களா?''

''கஸ்டம் சாந்தி. தமிழ்நாட்டு அரசியல்வாதிங்க குணம் கொசு மாதிரி. அப்பப்ப மருந்தடிச்சி வெக்கலாம். ஆனா கம்ப்ளீட்டா ஒழிச்சிர முடியாது. கொசுவால மிஞ்சிப்போனா என்னா பண்ண முடியும்? கடிக்கும். மலேரியா வரும். மருந்து சாப்ட்டு சரி பண்ணிக்கிட வேண்டியதுதான். உங்கப்பாவாண்ட பேசி உன்னிய தள்ளிக்கினு வந்தேன் பாரு. அந்த மாதிரி.

சாந்தி சிரித்தாள்.

''ஒண்ணு பண்ணுறிங்களா? எனக்கும் அரசியல் கத்துக்குடுத்துருங்க. உங்களுக்குச் சுளுவா இருக்கும்ல?''

முத்துராமன் சட்டென்று பிரேக்கை அழுத்தினான். வண்டி குலுங்கி நின்றது. சாந்தி திரும்பினாள்.

''நெசமாத்தான் சொல்லுறியா?''

''ஆமாங்க. யோசிச்சிப் பாத்தேன். உங்களுக்குப் பிடிச்ச மாதிரி இருந்துடலாம்னு தோணிச்சி. எங்க வீட்ல இருக்கறவரைக்கும் எங்கம்மா, அப்பாவுக்குப் பிடிச்சமாதிரி இருக்கேன். உங்க வீட்டுக்கு வந்தப்பால, உங்களுக்குப் பிடிச்சமாதிரி இருக்கறதுல என்ன தப்பு?''

முத்துராமன் புன்னகை செய்தான். அவள் முகவாயில் இடமாகக் கைவைத்துத் திருப்பி, கண்ணை உற்றுப் பார்த்துச் சொன்னான்: ''அப்படின்னா நீ அரசியல் கத்துக்க வேணாம். டைலரிங் கத்துத் தரேன். கத்துக்க. ரெண்டு பேரும் சேர்ந்து வேலை செய்வோம்!''

(முற்றும்)



# அர்த்தம் புரிந்து ஆடலாம்!

**பொ**ங்கு தமிழ் வளர்ச்சி அறக் கட்டளை வெளியிட்டுள்ள 'சிலப்பதி காரம் - குற்றாலக் குறவஞ்சி' இசைக் குறுந்தகடுகள் தக்க முறையில் தக்க தருணத்தில் வெளிவந்துள்ளன. இளைஞர் உலகம் ஒருபுறம் மரபு இசைக்கும், மரபுத் தமிழ் இசைக்கும் பெருந்திரளாக ஆதரவு அளித்தாலும், மறுபுறத்தில், மேல்நாட்டு இசை மற்றும் நவீன தொழில்நுட்ப இசைக் கருவிகள் பயன்படுத்தி வெளி வரும் திரை இசைப் பாடல்களைக் கேட்டுக் குழம்பி உள்ளனர். இந்நிலையில், 'ஜனரஞ்சகமாக' இசை அமைக்கப்பட்டு, துல்லியமாக ஒலிப்பதிவு செய்யப்பட்டு, சிறப்பாகப் பாடப்பட்டு இந்தக் குறுந் தகடுகள் வெளிவந்திருப்பது பாராட்டத்தக்கது.

இசை அமைப்பு இக் காலத்திற்கேற்ப, நவீன மாக இருந்தாலும், மரபு முறைக்கு உட்பட்டு இனிக் கிறது. குழந்தைகள் எளிதில் புரிந்து கொண்டு பள்ளி விழாக்களில் ஆட லாம்! இசை அமைப்பாளர் பி.கோபி நாத் அவர்களுக்குப் பாராட்டுக்கள். நாட்டிய நாடக இசையாக இருப்பதால் சற்று வாத்திய ஒலி மட்டும் அதிகம்.

அரசியல், மொழி, வேதங்களுக்கு அப் பாற்பட்ட கலை உணர்வோடு 'சிலப்பதி காரம் - குற்றாலக் குறவஞ்சி' இசைப் படைப்புக்களை ஆராய்ந்தால், இது ஒரு நல்ல தொடக்கம். மிக நல்ல முயற்சி!

குற்றாலக் குறவஞ்சி பாடல்களில் இசை அமைப்பு பெரும் பாலும் ஆனந்த பைரவி ராக அடிப்படையில் அமைந்து இருப்பதும் தமிழ் வாத் தியங்களான நாதஸ்வரம் - தவில் சில பாடல்களில் ஒலிப்பதும் அருமை! முகப்பு இசையில் வயலின் சோலோ இனிமை! இருந் தாலும், 'வானரங்கள் கனி கொடுத்து' பாடலில் பாரதிராஜா திரைப்பாடல் ஸ்டைலில் - 'தினத் தந்தினா' என்ற கோரஸ் பாடுவது அடுத்து தமிழ் ஓசையையும் மாலை மலரையும், 'மக்கள் குரலையும்' எதிர்பார்க்க வைக் கிறது.

எப்படி இருந்தாலும், 17-ஆம் நூற் றாண்டு படைப்பு - பாட்டன் சொத்தாக தமிழ் மக்களுக்கு இன்று இனிய படைப்பாக கிடைத் திருப்பது நிச்சயம் போற்று தலுக்குரிய நல்ல முயற்சி!

இந்த 'சிறு துளி' தமிழ்க் கலையுலகில் மிக விரை வில் 'பெரு வெள்ளமாக'ப் பெருகி ஆனந்த வெள்ளத்தில் அமிழ்த்தும், என்பது உறுதி!



**சீர்காழி சிவசிதம்பரம்**



* தலாய் லாமா

திபெத் நிறையவே மாறியிருக்கிறது. இன்னமும் மாறிக் கொண்டிருக்கிறது. ஆனால், அங்கு நிலவும் சீன ஆதிக்கம் மாறவேயில்லை!

திபெத் ஒரு சுதந்திர நாடு என்கிற முழக்கமும் கோரிக்கையும் திபெத் மக்களிடமே வலுவிழந்து வருகிறது. தலாய் லாமா மட்டும்தான் இன்னமும் விடாப்பிடியாகப் போராடிக் கொண்டிருக்கிறார்.

1979 தொடங்கி மொத்தம் 20 பேரை சீனாவுக்குத் தூது அனுப்பயிருக்கிறார் தலாய் லாமா. ஆரம்ப காலத்தில் முழம் நீளத்துக்குக் கோரிக்கைகள் அனுப்பி வைப்பது தலாய் லாமாவின் வழக்கம். இப்போதெல்லாம் வெறும் துண்டுக் கடுதாசிதான். திபெத்தில் சுயாட்சி மட்டும் போதும். மேலதிகம் கேட்பதற்கு ஒன்றும் இல்லை.

''எங்கள் மத வழிபாட்டை சீனா தடை செய்கிறது. புத்த மடாலயங்களில் உள்ள துறவிகளை விரட்டியடிக்கிறது. தலாய் லாமாவின் உருவப் படத்தைத் தடை செய்திருக்கிறது. உரிமைகளைத் திரும்பக் கொடுங்கள்'' என்று திபெத்தியர்கள் கேட்டார்கள்.

உணவு, உடை, மதம் இந்த மூன்றையும் வரிசைப் படுத்தச் சொன்னால், திபெத்தியர்கள் மதம், உணவு, உடை என்றுதான் வரிசைப்படுத்துவார்கள். தங்களது சிறு வயது முதல் பௌத்த மதக் கோட்பாடுகளைக் கவனமாகப் படித்து, வழிவழியாகத் தொடர்ந்து, தம் வாழ்வில் நடைபெறும் ஒவ்வொரு முக்கிய நிகழ்ச்சியையும் முக்கிய சடங்காகவே கொண்டாடும் திபெத்தியர்களால் சீனாவையும், அவர்களது கம்யூனிஸத்தையும் ஏற்றுக்கொள்ள முடியவில்லை.

திபெத்தியர்கள் பலருக்கும் தர்மசாலாதான் லாசா தலாய் லாமாதான் அவர்களது கடவுள். காரல் மார்க்ஸின் தத்துவங்களையும், மாவோவின் பொன்மொழிகளையும், கம்யூனிஸ்ட் அறிக்கைகளையும் அவர்களால் உள்வாங்கிக் கொள்ள இயலவில்லை.

திபெத்தின் நவீன சரித்திரம் மா சே துங்கிடமிருந்து தொடங்குகிறது. திபெத் மாறத் தொடங்கியதும் மா சே துங் ஆட்சிக்கு வந்த பிறகுதான்.

# திரும்பி வரும் திபெத்தியர்கள்!

ஜூலை 1950. சாம்டோவிலிருந்து நூறு மைல் தொலைவிலுள்ள டெங்கோ என்னும் பகுதியில் சீனாவுக்கும் திபெத்துக்கும் இடையே முதல் மோதல் வெடித்தது. போதிய ஆயுதங்களும் தகவல் தொடர்புக் கருவிகளும் இல்லாத திபெத் வீரர்கள் அலறினார்கள். பிரமாண்டமான சீனப்படைகளை எதிர்த்து வெற்றிகொள்வது சாத்தியமா?

சத்தியமாக சாத்தியமில்லை. ஆனால், சீனாவைப் பொறுத்தவரையில் திபெத்தோடு போரிட்டு அவர்களை வீழ்த்தித் திபெத்தைக் கைப்பற்றவேண்டும் என்ற திட்டம் கிடையாது.

திபெத் ஒரு பூஞ்சையான பிரதேசம். அரசாங்கம் என்று சொல்லிக்கொள்ளும் படியாக எதுவும் இல்லை. தலாய் லாமா தான் எல்லாமும். அவரும்கூட லாசாவில் இல்லை. இந்தியாவுக்குத் தப்பி வந்துவிட்டார். திபெத்தை அடித்து வீழ்த்தவேண்டும் என்று சீனா நினைத்திருந்தால் நொடியில் சாதித்திருக்கலாம்.

ஆனால், திபெத்தை அவர்களது முழுச் சம்மதத்துடன் தன்னுடன் இணைத்துக் கொள்ள வேண்டும் என்பதே சீனாவின் குறிக்கோளாக இருந்தது. அதனால்தான் திரும்பத் திரும்ப வானொலியிலும், துண்டறிக்கைகளிலும் தங்கள் பிரசாரத்தை வெளியிட்டார்கள்.

ஓர் ஆக்கிரமிப்பு சக்தியாகக் காட்டிக் கொள்ளாமல், திபெத்தை விடுவிக்க வந்த ஒரு நண்பனாகக் காட்டிக்கொள்ள முனைந்தார்கள்.




திபெத் ஏன் பின்தங்கியிருக்கிறது என்பதற்கான மூன்று முக்கிய காரணங்களையும் சீனா கண்டுகொண்டது. முதல் காரணம், ஒன்றுக்கும் உதவாத ராணுவம். சரியோ தவறோ சீனர்களை எதிர்க்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்துவிட்ட பிறகும், திபெத் தனது ராணுவ பலத்தைப் பெருக்கிக்கொள்ளவில்லை.

இரண்டாவது, பிற்போக்குச் சக்திகள். திபெத்தின் மதவாத அரசியல், திபெத்தின் வளர்ச்சியை மிகப் பெரிய அளவில் பாதித்தது. பழமைவாதிகள் திபெத்தின் முன்னேற்றத்துக்குத் தடையாக விளங்கினர். தான் ஒரு தனித்த வித்தியாசமான நாடு என்றும் புத்த மதத்தை உலகமெங்கும் பரப்புவதுதான் ஒரே நோக்கம் என்றும் திபெத் கருதியது.

**எ**த்தனை புத்த மடங்கள் கட்டப்பட்டன. எத்தனை பேர் புத்த மதத்துக்கு மாற்றப்பட்டனர் என்பது போன்ற சாதனைகள்தான், திபெத்திய அரசாங்கத் தலைவரான தலாய் லாமாவின் சிறந்த செயல்பாட்டுக்கு அடையாளம்!

**மருதன்**



நாட்டு மக்களின் நலன், அவர்களது முன்னேற்றம், கல்வி, சுகாதாரம் போன்ற முக்கிய பொறுப்புகள் கவனிக்கப்படவில்லை.

மூன்றாவது, சமயப் பணி. புத்த நெறிகளின்படி எளிமையாக வாழாமல் பெரிய பண்ணைகளைச் சேகரித்துக் கொள்வதிலும், அவற்றைத் தக்கவைத்துக் கொள்வதிலுமே தங்களது நேரத்தைத் துறவிகள் செலவிட்டனர்! அரசாங்க நடவடிக்கைகளில் எந்தவித புதுமையான மாற்றங்களையும் கொண்டு வரக்கூடாது என்று இந்தப் பிட்சுக்கள் முனைப்பாக இருந்தனர். தாம் அனுபவித்து வரும் வசதிகளுக்கு, எந்த விதமான சேதாரமும் வந்துவிடக்கூடாது என்பது மட்டுமே இவர்களது ஒரே நோக்கமாக இருந்தது.

**அரசாங்க நடவடிக்கைகளில் எந்தவித புதுமையான மாற்றங்களையும் கொண்டு வர கூடாது என்று இந்தப் பிட்சுக்கள் முனைப்பாக இருந்தனர்!**

குறைகளை அகற்றும் பணியைத் தொடங்கியது சீனா. அனைவருக்கும் கல்வி, சுகாதாரம், பாதுகாப்பு, சாலைகள், கடைத்தெருக்கள், அத்தனையும் உருவாக்கப்பட்டன.

என்ன வேண்டும் மதம்தானே? வைத்துக்கொள்ளுங்கள் என்றது சீனா. புத்த மடாலயங்கள் திறக்கப்பட்டன. யார் வேண்டுமானாலும் வாருங்கள், என்னத்தை யாவது செய்துகொள்ளுங்கள். பள்ளிகளையும் திறந்தார்கள். மதக்கல்வி, புத்தகல்வி எதுவேண்டுமானாலும் படித்துக்கொள்ளுங்கள். கூடவே, கணிதத்தையும் அறிவியலையும் கற்றுக்கொள்ளுங்கள். உங்களுக்குப் புண்ணியம் உண்டாகட்டும்.

உங்கள் அடுத்த பிரச்னை என்ன? தலாய் லாமா? அவர் இங்கே வரவேண்டும். மீண்டும் பொடாலா அரண்மனையில் வந்து வீற்றிருக்க வேண்டும். கைகளை உயர்த்தி உங்கள் எல்லோருக்கும் அருள் பாலிக்க வேண்டும். இதுதானே உங்கள் கோரிக்கை?

சரி, அழைத்து வாருங்கள். யானையில் உட்கார வைத்து அழைத்துவாருங்கள். அவருடன் உட்கார்ந்து பேச நாங்கள் தயாராக இருக்கிறோம். ஆனால், ஒன்று. ஒரு மதத்தலைவராக மட்டுமே அவர் இங்கே இருக்கவேண்டும். அரசாங்கம், தனியாட்சி, சுயாட்சி என்றெல்லாம் அவர் சிந்திக்கக்கூடாது. என்ன சரியா? தலாய் லாமாவிடமிருந்து பதிலில்லை.

கடந்து பத்து ஆண்டுகளில் திபெத் கண்டுள்ள வளர்ச்சி அபரிமிதமானது. ஒன்பதாவது வகுப்பு வரை அனைத்து குழந்தைகளும் கட்டாயம் படித்தாகவேண்டும். கட்டணம் கிடையாது. முழுக்க இலவசம். மூன்று லட்சத்து ஐம்பதாயிரம் புதிய மாணவர்கள் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் புதிதாகச் சேர்ந்துள்ளனர். இந்தியாவிலும் நேபாளிலும் குடியேறிய பல திபெத்தியர்கள் மீண்டும் திரும்ப திபெத்துக்கு வந்து கொண்டிருக்கிறார்கள். ஆயிரத்து எழுநூறு மடாலயங்கள், தேவைப்படும் அனைவருக்கும் திறந்து விடப்பட்டுள்ளன. தலாய் லாமாவின் பொடாலா அரண்மனையைப் பழுது பார்க்கும் பணி ஆரம்பமாகி உள்ளது. பீய்ஜிங்கிலிருந்து லாசாவுக்குப் போக, புதிய ரயில் பாதை அமைத்துக் கொண்டிருக்கிறார்கள். இது போதாதோ! ●



# அறிமுகம் -

முட்டை சைவமா அசைவமா? பால் சைவமா, அசைவமா? இது போன்ற கேள்விகளின் பட்டியலில் புதிதாக தக்காளியும் சேரவிருக்கிறது.

இதென்ன கலாட்டா என்கிறீர்களா...? எல்லாம் மரபணு மாற்ற மாயம்தான்!

தக்காளியின் சிறப்புகள் நமக்குத் தெரியும். இருந்தாலும் 'அது இன்னும் கொஞ்ச காலத்துக்கு அழுகாமல் இருக்கலாமே என்றும், கொஞ்சம் உயரத்திலிருந்து கை தவறி விழுந்தாலும் சிதையாமல் இருக்கலாமே' என்றும் சிலசமயம் தோன்றும் இல்லையா? (இல்லத்தரசிகளுக்குத் தோன்றவில்லை என்றாலும் தக்காளி வியாபாரிகளுக்கு நிச்சயம் தோன்றியிருக்கும்.)

பார்த்தார்கள் விஞ்ஞானிகள். மீனின் சில மரபணுக்களை தக்காளிக்குள் செலுத்தினால், அது சுலபத்தில் அழுகுவதில்லை என்றும், கோழியின் காலில் உள்ள மரபணுக்களை தக்காளிக்குள் செலுத்தினால், அது எளிதில் சிதைவதில்லை என்பதையும் கண்டுபிடித்தார்கள்!

இப்படி, மரபணு மாற்றத்துக்கு உட்பட்ட தக்காளி பரவலாகப் பயிரிடப்பட்டால், எல்லோருமே 'நான்வெஜ்' உணவுக்கு மாறியவர்களாகிவிட மாட்டார்களா...?

மரபணு மாற்றம் கண்ட (Genetically Modified) நெற்பயிர் அறிமுகமானபோது இந்திய உழவர்களில் கணிசமானவர்களும் அதை எதிர்த்தார்கள். அது உடல்நலத்துக்குக் கேடு விளைவிக்கும் என்பதாலும் எதிர்ப்பு எழுந்தது. இப்போது தக்காளி.!

இது குறித்து டாக்டர் எம்.எஸ்.சுவாமிநாதன் ஆராய்ச்சி நிலையத்தில் பணிபுரியும் விஞ்ஞானியான டாக்டர் ராஜலட்சுமி கருத்து கூறுகிறார்:

"நெற்கதிரின் மரபணுவை மாற்றும் முயற்சிக்கு முக்கிய காரணம் உண்டு. தண்ணீர்ப் பஞ்ச காலத்திலும், உவர் நீர் மட்டுமே சாகுபடிக்குக் கிடைக்கும் சூழலிலும்கூட, நெற்பயிர் செழித்து விளையும் வகையில் மரபணு மாற்றம் செய்யப்பட்டது. ஆனால், இவ்வாறு செயற்கை முறையில் விதைநெல் உருவாக்கித் தரும் தனியார் நிறுவனங்கள், ஒரு யுக்தியைக் கையாண்டன. அவற்றிலிருந்து விளையும் பயிரைக் கொண்டே, மீண்டும் விதை நெல் பெற முடியாது - அவை மலட்டு விதைகளாகவே இருக்கும்! மீண்டும் மீண்டும் விதை நெல்லை விலை கொடுத்துத்தான் வாங்க வேண்டும்!

எனினும், இது போன்ற மரபணு மாறுதல்களைச் செய்யவில்லை என்றால் விளைச்சலை அதிகரிக்கச் செய்ய முடியாது. இன்னும் நான்கு தலைமுறைகளுக்குப் பிறகு குறைவான விளைச்சல் காரணமாக, உலகில் உணவுப் பொருளுக்குக் கடும் பஞ்சம் ஏற்பட்டுவிடும்.

மரபணு மாற்றுவது என்றால் என்ன? என்பதைப் பார்க்க தக்காளியையே உதாரணமாக எடுத்துக் கொள்வோம். அது விரைவில் பழுப்பதற்கும் அழுகுவதற்கும் காரணமாக விளங்கும் அதன் மரபணுவின் ஒரு குறிப்பிட்ட பகுதியை மட்டும் வேகமாகச் செயல்படாதவாறு செய்துவிடுவார்கள். அதில் சேர்க்கப்படும் பிற மரபணு இதற்கு உதவக் கூடும்.

ஆனால், தக்காளியில் மீன் அல்லது கோழியின் மரபணுக்கள் கலந்து பயிரிடுவதாகக் கூறப்படுவது சரியில்லை. ஒரு வேளை இந்த முயற்சி ஆராய்ச்சிக் கட்டத்

# அசைவத் தக்காளி!

தில் இருக்கக்கூடும். தக்காளி போன்ற அழுகும் பயிர்களை வயல்களிலிருந்து சந்தைக்குக் கொண்டு வந்து விற்பதற்குள்ளாகவே சேதம் நிறைய ஏற்படும். மேலும், மிக அதிகமாக விளையும் காலத்தில், கொள்வார் இல்லாததால், அழுகிப் போய் விவசாயிக்கு நஷ்டமும் ஏற்படுகிறது. இதைத் தவிர்க்க ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்படுவது நல்லதுதான். மற்றபடி மரபணு மாற்றம் செய்யப்பட்ட உணவுப்பொருள்களால் ஒவ்வாமை ஏற்பட வாய்ப்பில்லை. கடுமையான சோதனைகளுக்குப் பிறகுதான் அவை பொதுமக்களை அடைகின்றன.

ஆனால், இயற்கையில் தலையிட்டு மனிதன் இதுபோல் சிருஷ்டி மாற்றங்கள் செய்யலாமா? என்கிற தார்மிகக் கேள்வி எழத்தான் செய்கிறது. என் தனிப்பட்ட கருத்து இதுதான்: சிம்பன்ஸி மற்றும் நமது டி.என்.ஏ.க்கள் (மரபணுவின் அடிப்படை) தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் ஒரே மாதிரியானவைதான். எந்த மரபணுவும் கார்பன், பாஸ்பரஸ், நைட்ரஜன் ஆகியவற்றின் கலவைதான். எனவே, இது குறித்து பெரிதும் அலட்டிக் கொள்ளத் தேவையில்லை. விஞ்ஞான ரீதியாக வெஜிடேரியன் மரபணு நான்வெஜிடேரியன் மரபணு என்று பிரிப்பதற்கில்லை. மத உணர்வுகள், கலாசார உணர்வுகளுக்குச் சேதம் விளைவிக்காமல் இருப்பதுதான் சவால்.

உலகம் முழுவதும் இப்போது மரபணு மாற்றம் செய்யப்பட்ட சோளம், சோயா பீன்ஸ் ஆகியவை விளைகின்றன. இந்தியாவில் மரபணு மாற்றப்பட்ட பருத்திக்கு அனுமதி உண்டு. ஆனால், அத்தகைய அரிசிக்கு இதுவரை அனுமதி இல்லை. சீனாவில் மரபணு மாற்றப்பட்ட அரிசியை ஏற்றுப் பயிரிட ஆரம்பித்து விட்டார்கள்.''

முக்கியமாக நான்கு நாடுகள்தான் மரபணு மாற்றப்பட்ட உணவுகளை அதிக அளவில் தயாரிக்கின்றன. அவற்றில் அமெரிக்காவும் அர்ஜெண்டினாவும் மட்டுமே தொண்ணூறு சதவீதம் தயாரிக்கின்றன. அடுத்த இரு இடங்களுக்கு வருவது கனடாவும் சீனாவும்.

வழக்கமான உணவுப் பொருளுக்கும் மரபணு மாற்றப்பட்ட உணவுப் பொருளுக்கும் உள்ள வித்தியாசத்தை எப்படிக் கண்டுபிடிப்பது? பார்த்தோ சுவைத்தோ இதைக் கண்டுபிடிக்க முடியாது. (பேக்கேஜில் உள்ள விவரத்தைப் படிக்க முடிந்தால்தான் தெரிந்து கொள்ள முடியும்). இதனாலேயே மிகக் கவனமாக இருக்க வேண்டும்.

உலக அளவில் ஒவ்வாமை அதிகரித்திருப்பதற்கு மரபணு மாற்றப்பட்ட உணவுப் பொருள்கள்தான் காரணம் என்று கருதுபவர்கள் உண்டு. இதுவரை மரபணு மாற்றப்பட்ட உணவுப் பொருள்களால் உண்டாகும் சாதக-பாதகங்கள் குறித்த ஆழ்ந்த ஆராய்ச்சி எதுவும் செய்யப்பட்டதில்லை என்பது கவலையூட்டும் உண்மை.

**- ஜி.எஸ்.எஸ்**

* டாக்டர் ராஜலட்சுமி



**மரபணு மாற்றப்பட்ட உணவுகளை அமெரிக்காவும் அர்ஜெண்டினாவும் மட்டுமே தொண்ணூறு சதவிகிதம் தயாரிக்கின்றன.**



# அதையும் தாண்டிய நேசம்!

ஹலோ வாசகர்களே!

தித்திக்கும் திங்களின் வெற்றிகரமான மூன்றாவது வாரத்தில் உங்களைச் சந்திக்கிறோம். திங்கள் கிழமை காலை, உங்களில் பலர் அலுவலகத்துக்குத் தொலைபேசி செய்து 'இந்த வார கல்கியைப் பற்றி விமர்சிக்கலாமா சார்?' என்று கேட்டீர்கள். உங்களின் ஆர்வத்துக்கும் அன்புக்கும் மிக்க நன்றி. நீங்கள் புகைப்படத்துடன் கடிதம் அனுப்பினால் போதும். நாங்களே உங்களைத் தொடர்புக் கொள்வோம்.

இந்த வாரத்தின் முதல் வாசகர் **இனாம்மணியாச்சியைச் சேர்ந்த ச.ஆ.கேசவன்.** ''நான் ஓய்வு பெற்ற இந்தி ஆசிரியர் சார். இன்னிக்கு உங்ககிட்டே இருந்து போன் வரும்ங்கற உறுதியான நம்பிக்கையில வெளி வேலைகளை ஒத்திவெச்சுட்டு காத்திருந்தேன். என் நம்பிக்கை வீண் போகலை. கல்கி வெறும் புத்தகம் மட்டுமில்லை சார். அதனிடம் வாசகன் என்பதையும் தாண்டி ஒரு நேசம் இருக்கு. கல்கி நடத்தின ஒரு போட்டியில் கலந்துகிட்டு வெற்றி பெற்றேன். அதற்காக எழுத்தாளர் அனுராதா ரமணன் அவர்களோடு ஹோட்டலில் கலந்துரையாடலுக்கும் விருந்துக்கும், ஏற்பாடு செய்தாங்க. அப்போது 'கல்கி' அலுவலகத்துக்கு வந்தப்ப ஆசிரியர் அன்போடு வரவேற்று, அலுவலகத்தின் ஒவ்வொரு பகுதிக்கும் கூட்டிட்டுப் போய் விளக்கினது மறக்க முடியாத அனுபவம். ஒரு சாதாரண வாசகனை இந்த அளவுக்கு மதிச்சு நடத்தினது கல்கி மட்டும்தான்'' என்று சிலிர்த்தார்.




அவரது பரவச முகத்தைத் தொலைபேசியில் பார்க்கும் நவீன






வசதி இல்லாவிட்டாலும், நம் மனத்தில் பார்க்க முடிந்தது. சென்ற வார கல்கியைப் பற்றியும் சிறப்பாக விமர்சித்தார்.

''முதல் பக்கத்தில் ஓர் அறிவிப்பு வெளியிட்டிருக்கிறோம். அது என்னவாக இருக்கும்னு யூகிக்க முடியுதா சார்?''

'முடியுதா சார்' என்பதை முடிக்கும் முன்பே பதில் வந்தது ''அமரர் கல்கியின் சரித்திர நாவலை வெளியிடப் போறீங்க, கரெக்ட்டா?''

அசந்துவிட்டோம். 'ம்!' இந்த வார முதல் பக்கத்தைப் பாருங்கள்!

''அப்படியா? எந்த நாவல் சார் வரப் போகுது. எனக்கு அமரர் கல்கியின் எழுத்துகள் ரொம்ப பிடிக்கும். இப்ப இரண்டு பக்கங்களில் போடற அவரோட கட்டுரைகளைத் தொடர்ந்து படிக்கிறேன்.'' - இப்படி ஆவலுடன் கேட்டவர் அடுத்ததாக நாம் பேசிய **ஈரோடு அகிலா அன்புமணி.**

இவர் மட்டுமல்ல, இவரது கணவர் அன்பு மணி, பன்னிரண்டு வயது மகள் யாழினி அனைவருமே 'கல்கி' இதழின் தீவிர வாசகர்கள். தொலைக்காட்சியில் நேயர் விருப்பம் கேட்பது போல் மூவரும் ரிசீவரை மாறிமாறி வாங்கிப் பேசினார்கள்.

''கல்கி பத்திரிகையை மட்டும்தான் சார் தைரியமா வீட்டுக்குக் கொண்டு வந்து மகளைப் பக்கத்திலேயே வெச்சுட்டுப் படிக்க முடியுது. இதைவிட வேற எந்த வார்த்தையால கல்கியின் சிறப்பைச் சொல்ல முடியும்?'' என்றார் அகிலாவின் கணவர் அன்புமணி.




# தித்திக்கும் திங்கள்!

அடுத்து தொடர்பில் வந்தவர் **மந்தவெளி கீதா சந்திரசேகரன்.** ''சென்னையைச் சுற்றியுள்ள நவகிரஹ தலங்கள் பற்றி படிச்ச பிறகுதான் அட இங்கேயே இத்தனை கோயில்கள் இருக்கான்னு ஆச்சர்யப்பட்டேன். பக்தர்களுக்குப் பயன்தரும் பகுதி. அதேபோல கல்கி வாங்கினதும், முதலில் படிப்பது அருள் வாக்குதான். மனிதனை நெறிப்படுத்தும் முறைகளை 'நறுக்'குன்னு ஒரு பக்கத்தில் சொல்லி இருப்பார் காஞ்சி பெரியவர்'' என்றார்.

''சிவாஜி விமர்சனம். படிச்சீங்களா? வழக்கமா கல்கியில் சினிமா விமர்சனம் ஒரு பக்கம்தான் போடுவோம். இதுக்கு ஏன் இரண்டு பக்கம்னு தோணுதா?'' என்று கேட்டோம்.

''இல்லை சார். சிவாஜி படம் இன்றைக்கு உலக அளவுல பரபரப்பா பேசப்படுது. அப்படி இருக்கறப்ப தாராளமா இரண்டு பக்கம் போடலாம். விமர்சனமும் சினிமா மாதிரி விறுவிறுப்பா இருக்கு'' என்றார்.

இதையே ஆமோதித்தார் **கோவில்பட்டி ஜான்சன்.** ''இன்றைய விஷுவல் மீடியாவோடு போட்டியிட்டு ஜெயிக்க வேண்டிய நிலையில் பத்திரிகை உலகம் இருக்கு. சினிமா எல்லோரையுமே விஷுவலா கவரும் விஷயம். அதனால் சினிமா சம்பந்தப்பட்ட லே-அவுட்டில் இன்னும் புதுமையைப் புகுத்துங்க'' என்றார்.

கவர் ஸ்டோரி மகா'பாவ' புரம் பற்றி எல்லோரும் பேசினார்கள். இதுபோன்ற சமூக விழிப்புணர்வுக் கட்டுரையைத் தொடர்ந்து எதிர்பார்க்கிறோம் என்றார்கள். நிச்சயம் செய்வோம். மீண்டும் அடுத்த வாரம் சந்திப் போம்.

**இந்த இதழை கவனமா படிச்சுக் கோங்க!**







கடந்த ஒரு மாத காலமாக மூன்றாவது அணி பற்றிய செய்திகள் மீடியாவை நிறையவே ஆக்கிரமித்திருந்தன. ஜனாதிபதி வேட்பாளர் தேர்வில், காங்கிரஸ் அப்துல் கலாமை கை கழுவியதைத் தொடர்ந்து, அவரை 'சிக்'கென பிடிக்கப் பார்த்தார்கள் மூன்றாவது அணியினர். மக்கள் மத்தியில் கலாம் பெற்றிருந்த நல்லெண்ணத்தை, தங்களுக்கு ஆதரவாகப் பயன்படுத்திக் கொள்ள முடியுமா? என்று முயன்று பார்த்தார்கள். ஆனால், அது பலிக்கவில்லை. மூக்குடைபட்ட மூன்றாவது அணி இப்போது ஜனாதிபதி தேர்தலில் யாரையும் ஆதரிக்கப் போவதில்லை என்று அறிக்கை விடவேண்டிய நிலைமைக்குத் தள்ளப்பட்டிருக்கிறது.

1984-ல் ராஜீவ் காந்தியை எதிர்த்து என்.டி.ராமராவ், கலைஞர் கூட்டணியில் உருவான மூன்றாவது அணி, 1989-ல் நடந்த பாராளுமன்றத் தேர்தலில் வி.பி. சிங்கை பிரதமராக்கியது. 1996-ம் ஆண்டு பாராளுமன்றத் தேர்தலில் மூன்றாவது அணியின் ஒத்துழைப்போடு தான் தேவேகவுடா பிரதமரானார். மூன்றாவது அணி தேசிய அளவில் தலைமைப் பொறுப்புக்கு வர முடியும் என்று நிரூபித்த காலகட்டங்கள் அவை.

இப்போது முலாயம் சிங், சந்திரபாபு நாயுடு மற்றும் ஜெயலலிதாவால் அமைக்கப்பட்டிருக்கும் ஐக்கிய தேசிய முற்போக்கு அணியில் ஒரு பலவீனம், அந்த அணியில் தேசியக் கட்சி ஒன்று இல்லாதது தான். 'தோல்வியடைந்த முதல்வர்களின் அணி' என்று கிண்டலக அழைக்கப்படும் மூன்றாவது அணி, 2009-ஆம் ஆண்டு பாராளுமன்றத் தேர்தல் வரை தாக்குப் பிடிக்குமா என்பதே இப்போதைய கேள்வி. ஏனெனில் மக்களால் புறக்கணிக்கப்பட்ட கட்சிகள், இந்தக் குறுகிய காலத்தில் மீண்டும் பலம் பெற்று வருவது என்பது மிகவும் சிரமமான காரியம்.

ஆனால், ''2009 பாராளுமன்றத் தேர்தலில் போட்டியே ஐக்கிய முற்போக்கு அணிக்கும், ஐயக்கிய தேசிய முற்போக்கு அணிக்கும்தான்'' என்று நம்பிக்கையுடன் சொல்கிறார் நமது எம்.ஜி.ஆர். நாளிதழின் கட்டுரையாளர் கோ.கலிவரதன்.

''இந்த ஐக்கிய தேசிய முற்போக்கு முன்னணியில் இருக்கும் தலைவர்கள் அந்தந்த மாநிலங்களில் மக்களின் ஏகோபித்த ஆதரவைப் பெற்றவர்கள். இப்படி மாநில கட்சிகள் வலிமை என்பது காலத்தின் கட்டாயம். நேரு, காந்தியைப் போல தேசியத் தலைவர்கள் இல்லாத நிலையில், காங்கிரஸ், பா.ஜ.கவைத் தவிர்த்த மதச்சார்பற்ற கொள்கையில் பிடிப்புடைய மாநில கட்சி தலைவர்களே இனி தில்லியில் கோலோச்சுவார்கள். அந்த வகையில் எங்கள் புரட்சித் தலைவி அவர்கள், தேசிய அரசியலில் பிரகாசிக்கும் காலம் வருகிறது.

2009 பாராளுமன்றத் தேர்தலில் ஜெ.வின் மூன்றாவது அணி முயற்சி வெற்றி பெற வேண்டுமென்றால் முதலில் அந்த அணி காங்கிரஸ் மற்றும் பா.ஜ.க.வில் இருக்கும் மாநிலக் கட்சிகளை, தங்கள் பக்கம் கொண்டு வந்து வலி

# கோமாவில் இருக்கும் மூன்றாவது அணி!

மையூட்ட வேண்டும். ஆனால், மாநில கட்சிகளின் தலைவர்களுக்கு இடையே உள்ள கௌரவப் பிரச்னையால், அனைவரும் ஒன்று சேர்வது கடினம். 'இன்னும் பல கட்சிகள் மூன்றாவது அணிக்கு வரும். உரிய நேரத்தில் யார் என்று தலைவர் அறிவிக்கப்படும்'' என்கிறார் கவிவரதன். ஆனால், இதற்கு மாறாகப் பேசுகிறார் பா.ஜ.க.வின் முக்கிய தலைவர்களில் ஒருவரான இல.கணேசன்.

''இப்போது மூன்றாவது அணி என்று சொல்லப்படும் அணியில் உள்ளவர்கள் எங்களுடன் தோளோடு தோள் இணைந்து பணியாற்றியவர்கள்தான். இந்த அணி அமைக்கப்பட்டிருப்பது ஒரு முடிவான நிலை அல்ல. தேசிய அரசியலில் கருணாநிதி பெற்றிருக்கும் முக்கியத்துவம் காரணமாக அதற்கு ஈடுகட்டும் விதத்தில் ஜெயலலிதா காய்களை நகர்த்துகிறார். இதன் மூலம் நாளை காங்கிரஸ் தி.மு.க.வை கை கழுவி விட்டால், தி.மு.க.வுக்கு தேசிய அளவில் ஒரு புகலிடம் இல்லாத நிலை உருவாகும். 2009-ம் ஆண்டு பாராளுமன்றத் தேர்தலில் காங்கிரஸ், பா.ஜ.க. தலைமையில் இரு கூட்டணிகள்தான் இருக்கும். மூன்றாவது அணியில் இருக்கும் கட்சிகள், எங்கள் அணிப் பக்கம் வரும் வாய்ப்பே அதிகம்'' என்கிறார்.

எது எப்படியோ, இப்போது துவக்கப்பட்டிருக்கும் மூன்றாவது அணி மூச்சுத் திணறலுடன் பிறந்திருக்கிறது என்பது பேருண்மை.

- ப்ரியன்



## இரண்டு நிமிட க்ளைமாக்ஸ்

**வ**ஸந்த் ஓர் எம்.பி. என்றார் இயக்குனர் கே.பாலசந்தர். கே.பி. சொல்லும் எம்.பி.க்கு 'மாஸ்டர் ஆஃப் பர்ஃபெக்ஷன்' என்று அர்த்தம். வஸந்த் இயக்கும் 'சத்தம் போடாதே' படத்தின் இசை வெளியீட்டை காமராஜர் அரங்கில் நடத்தினார். அரங்கம் நிரம்பிய அந்த நிகழ்ச்சியில் யுவன்ஷங்கர்ராஜா இசையமைத்த பாடல்களை 'லைவ்'ஆக பாடச் செய்தார். இசைக்குழுவினருக்கு பாடலைத் துவக்கி வைக்க ஸ்ரீகாந்த் தேவா, தேவி பிரசாத், விஜய் ஆண்டனி, இமான் என இளம் இசை அமைப்பாளர்கள் வந்திருந்தனர். ஹீரோ பிரிதிவிராஜும், ஹீரோயின் பத்மப்ரியாவும் தங்கள் பட அனுபவங்களைப் பகிர்ந்து கொண்டனர். ''விழாவின் கடைசியில் 'இரண்டு நிமிட க்ளைமாக்ஸ்' இருக்கிறது. மிஸ் பண்ணிடாதீங்க'' என்று ஆரம்பத்திலிருந்தே பில்ட் அப் கொடுத்துக் கொண்டிருந்தார் நிகழ்ச்சியைத் தொகுத்த படவா கோபி. அது என்னவென்று பார்த்தால், படத்தின் இரண்டு நிமிட டிரெய்லர்தான். அந்த டிரெய்லரில் இருந்து தொகுக்கப்பட்ட முந்நூறு ஷாட்கள் அதில் இடம் பெற்றிருந்தன.

- மானஸா

கினா ஒரு தொடர்தானே தவிர, சென்ற வாரத்தை நான் இந்த வாரத்தில் தொடர்வதே இல்லை. சிவாஜிக்குப் பிறகு ரஜினியின் செல்வாக்கு எப்படி இருக்கிறதென்று 'Cell'- வாக்கு மூலமாக வந்த ஒரு ஜோக் இதை எழுத ஊக்குவித்தது. 'மாலைப் பொழுதின் மயக்கத்திலே' என்று எஃப்.எம்.-ல் சுசிலா கிரங்கடித்துக் கொண்டிருக்க, ரஜினிகாந்தும் - ஜாக்கி சானும் சாதாரணமாகப் பேசிக் கொண்டிருக்கிறார்கள். கோப்பைகள் ஒன்றோடு ஒன்று மோதிக் கொள்வதைப்போல இருவரின் 'ego'-வும் மோதிக்கொள்கிறது. "உலகம் பூரா இத்தனை பிரிண்டை போட்டு ரிலீஸ் பண்றதுனால ஓர் ஊர்க் குருவி, ஜாக்கிசானா ஆக முடியாது.''

லக...லக...லக...வென சிரித்தபடி, ''ஜாக்கி, எனக்கு உலகம் பூரா ரசிகர்கள் இருக்காங்க. ஜப்பான்ல ரசிகர் மன்றமே இருக்கு! சீனாவுல என்னோட பி.ஆர்.ஓ.வே யுவான் சுவாங்தான்!''

ஜாக்கி:''ஓ.கே. ஒரு பெட் (bet). Tom Cruiseஐ உங்களுக்குத் தெரியுமா? Tom Cruise யாருன்னாவது உங்களுக்குத் தெரியுமா?''

அடுத்த flight-ல் ஏறி, 'டாம் கு'வின் வீட்டு Calling Bell-ல் இறங்கினார்கள். சத்தம் கேட்டு வெளியே வந்த அந்த sound party டாம் கு ஒரு 'Y.G. மகேந்திரனின்' expressionனோடு ரஜினியைக் கட்டிப்பிடித்துக்கொண்டு, அவரின் புறமுதுகு வழியே ஜாக்கியைப் பார்த்து, "Hai Jackie" - என்று சொல்ல, ஜாக்கி நெஞ்சைப் பிடித்துக் கொள்ள, சப்பை மூக்கு டாக்டர்காரி ஒருத்தி, First Attack என்று மணியடிக்கிறார். ICU-விலிருந்து வெளிவரும் ஜாக்கிசான், ''டாம் கு-க்கு எப்பவுமே எம்மேல ஒரு பொறாமை. அதனாலதான் அவன் என்னை insult பண்ணிட்டான் doesn't matter. புஷ்-ஐ பாத்துருக்கியா? என சீரியஸாகக் கேட்க, பழைய பழக்க தோஷத்தில் ரஜினி முடியைச் சிலுப்பி விட்டவாறு, அந்த hospital-ன்

## ஜிகினா-13





# ரஜினி- ஜாக்கிசான் ஈகோ மோதல்!



கதவை இழுத்து நிறுத்தி வைத்திருந்த 'புஷ்'ஷைப் பார்க்க, ஜாக்கி ''இந்த கிண்டல்லாம் வேணாம். இப்ப புஷ் உங்களைப் பாத்தா ரஜினின்னு கண்டுபிடிச்சுடுவாரா?'' ரஜினி Cool-ஆக ''தெரியல கண்ணா, போய்த்தான் பாக்கலாமே'' என்கிறார். சமீபத்தில் கண்ணாம்பு அடிக்கப்பட்ட அந்த வெள்ளை மாளிகை முன்பு இருவரும் நிற்க, ஏதோ நினைத்தவராக ஜாக்கி, ரஜினிக்கு முன்னால் போய் அவரை மறைத்தபடி நிற்கிறார். வரும்போது 'புஷ்' தன்னைத்தான் முதலில் நோக்க வெண்டுமென்ற நோக்கத்தில், ஒரு மணி நேரம் அப்படியே புஷ் வழியையே, வராத வழியாய் பார்த்திருக்க, தனக்குப் பின்னால் ஏதோ kissing sound கேட்டுத் திரும்ப, புஷ்ஷின் மகன் ரஜினிக்கு முத்தம் கொடுத்துக் கொண்டிருக்க, அதை ரசித்துக் கொண்டிருந்த 'புஷ்' ஒரு third Person ஆய், ஜாக்கியைப் பார்த்து சிரிக்க, second attack!. ஆஸ்பத்திரியிலிருந்து வெளியேறிய ஜாக்கி- 'இதனாலதான் 'புஷ்'க்கு மக்கள்கிட்ட செல்வாக்கு குறைங்சுக்கிட்டேயிருக்கு. அடுத்து என் படம் Kidnapping of the President - Part II - நானே தமிழ்ல நடிச்சு எடுக்கப் போறேன். நமுட்டுச் சிரிப்பு ரஜினி. ஜாக்கியிடம், ''போப்பா... போப்பா... போய் வேலையைப் பாரு'' என, சட்டென ஜாக்கி ''ஆ... போப்பான்னு சொன்னவனைதான் ஞாபகத்துக்கு வருது. 'போப்'க்கு ரஜினிய யாருன்னு தெரியுமா? Silent - ஆக ரஜினி, ஜாக்கியின் கையைப் பிடித்து, ''வாடி - கண்ணா - வா - என வாடிகன் சிட்டிக்கு அழைத்துச் செல்ல, போப் ஆண்டவரின் தரிசனத்துக்காக ஊரே கூடி அந்த அகன்ற சாலையில் காத்திருந்தது. ரஜினியைப் பார்த்ததும் அந்தக் கூட்டம். கூட்-டம்மாகப் பிரிந்து ரஜினிக்கு வழிவிட்டது.

''எப்படி அதிருதில்ல'' என்றபடி ரஜினி போப்பின் அரண்மனைக்குள் நுழைந்தார். ஜாக்கி ஏளனமாகச் சிரித்தபடி, ''போப்பா... போப்பா...' போப்'புக்கிட்ட உன் பாட்சா பலிக்காது'' என்று கூட்டத்தோடு கூட்டமாய் அலை மோதிக்கொண்டிருக்க, திடீரென கூட்டத்தக்குள் போப் வருவதற்கான சலசலப்பு. அனைவரும் அந்த மாடத்தையே பார்க்க, ரஜினியின் தோளில் கை போட்டபடி பழைய அண்ணாமலை சரத்பாபு போல போப் வந்து நிற்க, பெருமிதத்துடன் ரஜினி கையை அசைத்தபடி ஜாக்கியைத் தேட, ஜாக்கி நின்ற இடத்தில் மக்கள் - ஈக்களாய் மொய்க்க, அது மூன்றாவது At-tack என ரஜினிக்குப் புரிவதற்குள் ஜாக்கியை ஆம்புலன்ஸ்க்குள் ஏற்றி, ஆக்சிஜனை ஏற்ற, பதைபதைப்புடன் ரஜினி, ''என்னாச்சு ஜாக்கி'' என கேட்க,

**-ரா.பார்த்திபன்**

# குறி சொல்பவர்கள் போல சொல்லிவிட்டு

# நீ பெரிய ஹீரோவா வரப் போறே! என்று

ஈனஸ்வரத்தில் ஜாக்கியின் கண்கள் திறந்து அவருடைய வலக்கை ஓர் உலக்கை போல், தன் தலையிலேயே அடித்துக்கொண்டு குலுங்கி அழ, ''சொல்லுங்க ஜாக்கி என்ன ஆச்சு?'' ''என்னத்த சொல்றது?!'' உலகமே அழியப் போகுது''

''எத வச்சு சொல்ற'' நீயும் போப்பும் மாடத்துல ஒண்ணா நின்னத வச்சுதான் சொல்றேன்'' ''அதுனால உனக்கு heart attack-வரும்னு எனக்குத் தெரியும். ஆனா, எப்படிப் பொழச்சே?'' என் பக்கத்துல கறுப்பா நின்ன red indian-அ கொலை செய்யணும். அதுக்குதான் பொழைச்சேன்.''

''ஏன் அவன் என்ன செஞ்சான்.''

''நீயும் போப்பும் நிக்கிறதைப் பாத்துட்டு அவன் எங்கிட்ட கேக்குறான். அங்க நிக்கிற இரண்டு பேர்ல ஒருத்தரு ரஜினின்னு நல்லாத் தெரியுது. இன்னொருத்தரு யாரு சார்-னு கேட்டான்? என்ன கொடுமை சார் இது?!'' என ஜாக்கி கொதிக்க, ரஜினி உதட்டுப் புகையை அந்த வெள்ளை ஊதாங்குழல் வழியே ஜாக்கியின் முகத்தில் ஊத, அந்தப் புகை வளையங்களிலிருந்து 'Loooooc' ஒவ்வொன்றாக வெளிவந்து, ஜாக்கியின் தலையை இடம் வலமாகச் சுற்ற, அதனால் ஜாக்கியின் தலை சுற்ற, ஒரு வழியாக அந்த எழுத்துக்களும், ஜாக்கியின் மூச்சும் நின்றன! 'CoooooL!'



Actual - ஆ இந்த வாரத்தை நான் எப்படி ஆரம்பிக்கலாம்னு இருந்தேன்னா... கூட்டத்தோடு கூட்டமாய் நடித்துக் கொண்டிருந்த நான் கொஞ்சம் முகம் தெரியும்படி, அது நாலு பேருக்கு அடையாளம் தெரியும்படி வெளிவந்த படம், பாக்யராஜ் சாரின் 'தாவணிக் கனவுகள்' அதில் ஒரு 'Postman' வேடம் எனக்கு. என்னுடன் நடித்தவர் நடிப்பின் 'என்சைக்ளோபீடியா' திரு.சிவாஜிகணேசன். அவருடன் முதல் படத்திலேயே நடிப்பதென்பது அளவிலாப் பெருமை! (அதுக்காக என்னுடன், சிவாஜி என்பதெல்லாம் கொஞ்சம் 'டூ மச்'தான்!) அந்தப் படத்தின் படப்பிடிப்பு விஜயசேஷ மஹால் கல்யாண மண்டபத்தில் நடந்து கொண்டிருந்தபோது, என்னுடன் ராதிகா நடித்தார். (பாத்தியா மறுபடியும்?!) 'ராதிகா' நடிக்கும்போது நான் சும்மா இருந்தேன். ஆனால், நான் நடிக்கும்போது ராதிகா சும்மா இருக்கவில்லை. என்னைக் கூர்ந்து கவனித்தார். 'Shot' முடிந்ததும், ''நீ வேணும்னா பாரு, நீ பெரிய 'hero' வா. வரப்போற!'' என்று குறி சொல்பவர்களைப் போல சொல்லிவிட்டு, கழட்டிப் போட்ட சோழியாட்டம் சிரித்தார். என்னை அவர் கிண்டல் செய்கிறார் என்று புரிந்தது. ஆனால், ஏன் கிண்டல் செய்தார் என்று புரியவில்லை. வந்த கோபத்தை முகத்தில் அப்பிக்கொண்டு, ''ஏன் இப்படிக் கிண்டல் பண்றீங்க?'' என கேட்டேன், ''ஐயையோ நான் சீரியஸாவே சொல்றேன். உன் கண்ணு 'powerful' - ஆ இருக்கு. என்னைக் காவது ஒருநாள் நிச்சயம் நீ hero-வா வருவ. எழுதி வச்சுக்க!'' என்றார். வச்சுக்கவில்லை நான் எழுதி. ஆனால், என்னை

# சொழட்டிப்போட்ட சோழியாட்டம் சிரித்தார்!

அறியாமல் எனக்குள் ஊற்றாய் ஒளிந்திருந்த நடிப்பு ஆர்வம் பொங்கி, கொப்பளிக்க அவரின் ஆருடம் காரணமாயிருந்தது! இதேப்போல என்னை முன்கூட்டியே கணித்த தயாரிப்பாளர் 'K.R' அவர்கள்.. நீங்க ஒரு படத்தை Direct பண்ணி, அது ஜெயிச்சாக்கூட நீங்க மத்த heroக்கள் பின்னாடிதான் அலையணும். அதுக்குப் பதிலா நீங்களே நடிச்சு அதுல ஜெயிச்சிங்கன்னா, அதுக்கப்புறம் நீங்க யாரையும் depend பண்ணியிருக்க வேண்டியதில்லை''- இன்று இதைப் படித்துப் பார்க்கும்போது இவை யாவும் எழுத்துக்கள் கோக்கப்பட்ட வார்த்தைகள். ஆனால், அன்று ஒவ்வொரு வார்த்தையுமே, ஒரு விருட்சத்தின் விதையாய் முளைவிட்டது! இப்போதும் ராதிகா என்னைப் பார்க்கும்போது அவர் பார்வையில் நான் heroவானதைவிட, அவரின் கணிப்பு heroவானதைப் போலவே ஒரு பெருமிதம் இருக்கும். அவர், போகும் ரயிலில் வந்தவர். கிழக்கே போகும் ரயிலில், ஒரு சொரைக்காய்க்குப் பாவாடை, தாவணி கட்டிவிட்டதைப் போலவென, அச்சு அசலாய் ஒரு கிராமத்துப் பெண்ணாக வந்து நிற்பார். (பாரதிராஜா சார் கொஞ்சம் கை கொடுங்க please) அவருடைய வெள்ளந்தியான சிரிப்பு மட்டும் வெள்ளித் திரையோடு ஒட்டிக் கொண்டது. திரை அகன்று இருந்த போதும், குறுகிய போதும், அவருடைய நடிப்பாற்றல் மட்டும் குறுகியதேயில்லை!

சில வருடங்களுக்கு முன் அம்மாவை மறந்து தூங்கிய குழந்தைகள்கூட உண்டு. ஆனால், சித்தியைப் பார்க்காமல் தூங்கிய அப்பாக்களே இருக்க முடியாது.

அந்த சீரியலைப் பார்க்காமலே நான் அவரை 'அரசி'யாகவே பார்ப்பதற்குக் காரணம், நூறு கோடி வர்த்தகமாக உயர்ந்திருக்கும் 'Radaan Tv'-யின் உச்சமல்ல, அதைவிட உயர்வாய் நான் நினைக்கும் அவரின் உள்ளம்! திரு.எஸ்.ஏ.ராஜ்கண்ணு அவர்களுக்கு, தன் ஸ்தாபனத்தில், முதன்மை ஸ்தானத்தை கொடுத்து, அவரைக் கௌரவப்படுத்திய அந்த மனித ஈரமே மனித நேயமே, அவரை நான் மதிக்க குறிப்பிடத் தகுந்த காரணம்.

உலகப் பணக்காரர்கள் listல எவனெவன் பெயர், எந்தெந்த இடத்தில் இருக்கு? என எனக்கு எந்த அக்கறையும் இல்ல.

ஆனால், ஒரு மனிதனோட சமூக உயரமென்பது ஸ்கேலை வைத்து 'அடி'க்கணக்குலயோ, சென்டிமீட்டர்களாலயோ அளப்பதல்ல. அதன் அளவுகோல், அடிப்படையில அவனுக்குள்ள 'சென்டிமென்ட்ஸ்'களை வைத்துதான்!

**(மின்னும்)**





# பிளாஸ்டிக் கடவுள்!

காலத்திற்கு ஏற்ற கருத்துக் கொண்ட நடுத்தர குடும்பப் பிரச்னையை, மேடை ஏற்றுவதில் மீண்டும் வெற்றி பெற்று இருக்கிறது 'யுனைடெட் விஷுவல்' நிறுவனம். கடந்த மாதம் திங்கள் (18.06.07) அன்று நாரத கான சபாவில் 'பிளாஸ்டிக் கடவுள்' என்ற நாடகம் முதன்முறையாக மேடையேறி இருக்கிறது.

கறுப்பு - வெள்ளை தொலைக்காட்சி, கல்லுரல், மார்க்கோனி காலத்து ரேடியோ இவற்றுடன் கட்டும் செட்டுமாக வாழ்க்கை நடத்தி வருகிறான் மிடில்கிளாஸ் ராஜாராமன். தனியார் வங்கியில் சேர்ந்த தன் தம்பியின் தொந்தரவு தாங்க முடியாமல், கிரெடிட் கார்டு ஒன்றை - எந்தக் காரணத்தைக் கொண்டும் அதைப் பயன்படுத்த மாட்டேன் என்கிற வைராக்கியத்துடன் பெற்றுக் கொள்கிறான். ஆனால், ஒருமுறை தன் சம்பளத்தை பிக்பாக்கெட்டிடம் பறி கொடுத்து விட, முதல்முறையாக கார்டைப் பயன்படுத்த வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. அதுவே பெருகி கந்துவட்டி, தற்கொலை முயற்சி என்ற அளவுக்கு வருகிறது.

கடன் அட்டையை வெறுக்கும் ராஜாராமன், மீண்டும் மீண்டும் அதைப் பயன்படுத்துவதால் ஏற்படும் ஆனந்தத்தை வரதராஜன் சிறப்பாகக் காட்டியிருக்கிறார். (பின்னணியில் பழைய சாமான்கள் விடை பெற புதுப்புது வீட்டு உபயோகப் பொருள்கள் குடியேறுவதும், ஒலிக்கும் வீரமணி சோமுவின் பாடலும் காட்சிக்கு மெருகேற்றுகின்றன). மனைவியாக வரும் உஷா, கந்து வட்டிக்காரராக வரும் ரவிகுமார், வங்கி மேனேஜர் கோவிந்தராஜன், தம்பி கிருபா என எல்லோருமே பொறுப்பாகவும் பொருத்தமாகவும் தங்கள் பங்களிப்பைச் செய்திருக்கிறார்கள்.

இறுதிக் கட்டத்தில் ஆளாளுக்குத் தன்னாலான ஆன உதவியைச் செய்ய முன்வரும்போது, மனைவியும் தன் நகைகளைத் தர முன்வருவது நெருடல். கடன் அட்டையினால் விளையக்கூடிய எல்லாப் பாதகங்களையும் முதலிலேயே அறிந்திருப்பவனாக ராஜாராமனைக் காட்டுவதைவிட, இதெல்லாம் சரியாக விளங்காத அப்பாவியாகக் காட்டியிருக்கலாமே?

கடன் அட்டை விண்ணப்பத்தில் ராஜாராமன் கையெழுத்திட்டதும், எலிப் பொறியில் மாட்டிக்கொண்ட எலியை ஒருவர் எடுத்துக்கொண்டு வரும்போது அரங்கில் எழும் கைத்தட்டலுக்கு, சந்திரமோகனின் வசனமும் ஒரு காரணம்.

மொத்தத்தில் கிரெடிட் கார்டின் சாதக - பாதகங்களை நம் கண்முன் நிறுத்துகிறது 'பிளாஸ்டிக் கடவுள்'.

**ஜி.எஸ்.எஸ்.**

• பி. இராஜேந்திரன், லோயர் அணைக்கட்டு.

*? தமிழகத்துக்குத் தண்ணீர் தர மறுக்கும் கர்நாடகா அமைச்சர்கள், தங்கள் பதவி நிலைக்கவும் ஆயுள் அதிகரிக்கவும் வேண்டி இங்குள்ள கோவில்களில் வழிபட வருகிறார்களே?*

! வரவேற்போம்; இறைவன் அவர்களுக்கு நல்வழி காட்டி அருள்புரிய பிரார்த்திப்போம்.

• ஜே. துரைராஜ், சென்னை - 116.

*? ராஜஸ்தான் ஆளுநர் பிரதிபா பாட்டில் பர்தாவைப் பற்றி கூறியது வரலாற்று ஆராய்ச்சியாளர்களையும் முஸ்லிம் சீர்திருத்தவாதிகளையும் திடுக்கிட வைத்திருக்கிறதே?*

! அதைவிடப் பெரிய 'திடுக்' 'திடுக்': அவர் தலைமையில் நடந்து வந்த கூட்டுறவு வங்கியின் பிரும்மாண்ட ஊழல்; அவர் சகோதரர் மீது கொலைக் குற்ற வழக்கு... ஆண்டவனே! ஜனாதிபதி பதவி வகிக்க வேறு தகுந்த நபரா இல்லை?



* சறுக் சறுக்!



* சர்ச்சையில் சர்!

## நீங்கள் கேட்டவை

# ருஷ்டிக்கு 'ஸர்' பட்டம் சரியா? தவறா?



* திடுக் திடுக்!

• ஆர். ராமசுப்ரமணியன், கோவை.

*? "வெற்றி உறுதி செய்யப்பட்டால் நான் குடியரசுத் தலைவர் தேர்தலில் போட்டியிடுவது பற்றி யோசிக்கிறேன்" என்று*

17.6.07 இதழில் இடம்பெற்ற 'வாசக தராசு' போட்டியில் பரிசு பெற்றவர் : பி. சந்திரா, சேலம்-14. பரிசு பெறும் கேள்வி : 11

*கலாம் கூறியதன் மூலம் தமது தகுதியில் ஒரு மாற்று குறைந்துவிட்டார் அல்லவா?*

! 'அனைவரும் விரும்பி ஏற்றால்' என்கிற நிலையிலிருந்து 'வெற்றி உறுதி செய்யப்பட்டால்' என்கிற நிலைக்கு அவர் இறங்கி வந்திருக்க வேண்டாம். ஒரு சின்ன சறுக்கல் அது. பின்னர், ''ராஷ்டிரபதி பவனில் அரசியல் புகுவதை நான் விரும்ப வில்லை'' என்று சமாளித்தும் இருக்கிறார்.

● **எம். பாஸ்கர், திண்டுக்கல்.**

*? தம்மை அரசியல்ரீதியாகத் துன்புறுத் தும் இந்திய அரசியல்வாதிகள் மீது வழக்கு தொடரப் போவதாக குவாட்ரோச்சி சொல் கிறாரே?*

! போஃபர்ஸ் நாடகத்தில் வில்லன் குவாட்ரோச்சியின் வசனங்களுள் இதுவும் ஒன்று. இன்றைய பிரதமர் மன்மோகன் சிங் மீதும், இன்றைய ஆளும் கட்சித் தலைவர் சோனியா மீதும் அவர் வழக்குத் தொடரவா போகிறார்! அவர்கள்தானே ஆர்ஜென்டினாவுக்கு சி.பி.ஐயை அனுப்பி னார்கள்!

● **மீனா ரங்கநாதன், சென்னை - 33.** ★

*? அரசியல் வாரிசு - சினிமா வாரிசு என்ன வேறுபாடு?*

! சினிமா வாரிசுக்குத் தகுதி இல்லை எனில் சில ரசிகர்களைத்தான் பாதிக்கும். அரசியல் வாரிசுக்குத் தகுதி இல்லை யெனில் நாட்டையே குட்டிச்சுவராக்கும்!

● **எஸ். சங்கர், திருப்பரங் குன்றம்.**




*? முஸ்லிம் மதத்துக்கு எதிராக எழுதி பெரும் தண் டனை பெற்ற, சர்ச்சைக் குரிய எழுத் தாளர் சல் மான் ருஷ்டிக்கு இங்கிலாந்து 'சர்' பட்டம் வழங்கியது முறையா?*

! ருஷ்டியின் எழுத்துக்கள் உயர்ந்த இலக்கிய அமைப்புகளால் மதித்துப் போற்றப்படுகின்றன. அதற்குத்தான் 'சர்' பட்டம். சர்ச்சைக்கு உள்ளானது ஒரு புத்தகம் மட்டுமே.

● **இல. சுந்தரம், பெருங்குளம்.**

*? டில்லி திஹார் சிறையில் கைதிகளின் எண்ணிக்கை அதிகமாகிவிட்ட காரணத் தால், பத்து நாட்களில் அதிகாரி உள்ளிட்ட எட்டு பேர் மரணமடைந்துள்ளனர். சாதார ணக் குற்றங்களுக்காகச் சிறை வைக்கப் பட்ட கைதிகள் பலர், தண்டனை முடியு முன் விடுதலை செய்யப்பட்டுள்ளனர். இவை தவறல்லவா?*

! நிச்சயம் தவறுதான். இதிலிருந்து அறியவேண்டியது, குற்றங்கள் - தண்ட னைகள் நாளுக்குநாள் அதிகரித்து வருகின் றன என்பதே. இதைத் தவிர்ப்பது எப்படி என்பது அடிப்படை. அடுத்து சிறைச் சாலைகளை விரிவுபடுத்தி, வசதி களைக் கூட்டி, சீர்திருத்தங்களை அமல் படுத்துதல்.

● **ஆர். செல்லம்மாள், திருச்சி - 6.**

*? பல வருஷங்களுக்கு முன்பு நடந்த தாகச் சொல்லப்படும் போபர்ஸ் ஊழல் என்பதன் பேரில், பல ஆயிரம் ரூபாய் செலவு செய்து, குவாட்ரோச்சிக்கு நீதி மன்றம் மூலம் தண்டனை பெற்றுத் தருவ தால் என்ன நன்மை ஏற்படும்? போன பணம் போனதுதானே?*

! அட கடவுளே! பணம் கிடைக்கா விட்டாலும் நீதி கிடைக்குமே அம்மா! 'குற்றவாளி என்றேனும் ஒருநாள் தண்டிக் கப்படுவான்' என்ற பயம் போய்விட்ட தால்தானே இன்று அநீதிகள் அதிகரிக் கின்றன!

● **கே. தாருதா, நாகர்கோவில் - 2.** ❒

*? மும்பை தாராவியில் தமிழர்கள் வாழ் பகுதியில் அடுக்குமாடி கட்டிடங்கள் கட்ட*

அரசு முடிவு செய்துள்ளது. தமிழர்கள் வீடுகளைக் காலி செய்ய வேண்டும் என்று ஆணை... இதை எதிர்த்துப் போராட்டம் நடக்கிறதே?

! தாராவி வாழ்க்கையைக் காட்டிலும் தரமும், சிறந்த பணி வாய்ப்பும் பொருந்திய சூழலை உறுதிசெய்து அவர்களை மாற்றினால், ஏற்று, மறுவாழ்வு தேடிக் கொள்வதை முன்னேற்றமாகத் தமிழர்கள் கருதுவது நல்லது.

● இரா. சக்கரபாணி, மதுரை - 7.

? பெரியார் திரைப்படம் ஓடுகிறதா? அரசால் ஓட்டப்படுகிறதா?

! மதுவிலக்கில் அக்கறைகொண்டு, கள் இறக்கப்பட்டுக் கொண்டிருந்த காரணத்தால், தம் வீட்டுத் தோட்டத்தில் இருந்த தென்னை மரங்களையே வெட்டிச் சாய்த்தவர் பெரியார். ஆனால், இன்று தமிழக வீதிகளில் மது நதி ஓடுகிறது. கள் இறக்குவதை அனுமதிக்கவும் அரசு தயாராகி வருகிறது. இந்நிலையில் பெரியார் படம் ஓடினால் என்ன? ஓட்டப்பட்டால்தான் என்ன?

● அ. சுகுமார், காட்பாடி.

? சிவாஜி பட கட்- அவுட்டுக்கு பீர் அபிஷேகம், பாலாபிஷேகம் செய்து வழிபட்ட ரஜினி ரசிகர்களின் ஆர்வம் பற்றி...?

! பீர் அபிஷேகம் செய்துவிட்டுப் போகட்டும். அந்த அளவுக்கு மது வீணானதில் மகிழ்ச்சியே. ஆனால், ஆழாக்குப் பாலுக்கு ஏங்கும் குழந்தைகள் கொண்டது நம் நாடு என்பதை மறந்துவிடக் கூடாது.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? சிவாஜி பட டிக்கெட்டுகள் பகிரங்கமாகவே பல மடங்கு விலைக்கு விற்கப்பட்ட கொடுமையை காவல்துறை எப்படி வேடிக்கை பார்த்தது?

! என்ன விலை கொடுத்தும் வாங்கத் தயாராக, பல சினிமா பைத்தியங்கள் இருக்கிற வரையில், காவல் துறைக்கு வேடிக்கை பார்ப்பது தவிர வேறு வழி இல்லை! எத்தனை பேரைக் கைது செய்வது? எத்தனை வழக்குப் போடுவது? குற்றத்தை எவ்வாறு நிரூபிப்பது?

● உமரி பொ.கணேசன், மும்பை - 37.







? அப்துல் கலாம் தமக்கு மீண்டும் ஜனாதிபதி பதவி தேவையில்லை என்று கூறியுள்ளார். ஆனால், விஜயகாந்த், அவர் வருவதை கருணாநிதி தடுத்துவிட்டதாகப் பிரசாரம் செய்துள்ளாரே?

! ஜெயலலிதா ஏற்படுத்திய பைக் கேப்பில் ஆட்டோ ஓட்ட கேப்டனுக்கா தெரியாது!

● லெ. நா. சிவகுமார்,
சென்னை - 33.

? 'வேலை வாய்ப்பு விஷயத்தில், இட ஒதுக்கீடு அளிப்பதை விட அனைவருக்கும் சம வாய்ப்பு அளிப்பதே சிறப்பான தீர்வாகும். அத்தகைய இந்தியாவை உருவாக்கவே நாங்கள் விரும்புகிறோம்' என்று டாடா நிறுவன தலைவர் ரத்தன் டாடா பேசியுள்ளது பற்றி...?

! தெளிந்த, உயர்ந்த சிந்தனை. 'தனியார் துறையிலும் இட ஒதுக்கீடு' என்ற கோரிக்கைக்குத் தரப்பட்ட அறிவு சார்ந்த பதில்.

❑ ரூ. 100/- பரிசு பெறுபவர் :
கே. தாருதா,
நாகர்கோவில் - 629 002.

✱ ரூ. 50/- பரிசு பெறுபவர் :
மீனா ரங்கநாதன்,
சென்னை - 600 033.

**சிரி சிந்தி செயல்படு!**

# 2057 இடைத்தேர்தல்

## அத்திப்பட்டியில் அமெரிக்க-ரஷ்ய கூட்டு ராணுவ பாதுகாப்பு

கருத்து: யுவா, படம்: பிள்ளை



Registered with the Registrar of Newspaper of India under No.1041/57 Registered No.TN/CC(S)DN/144/06-08-Licensed to post without prepayment under PMG's Licence No.WPP TN/CC(S)DN/70/06-08-Registered as a Newspaper in Srilanka.